சந்தக் கவிமாமணி

# தமிழழகன்



# ஒளியைத் தேடி





முன்பெல்லாம்
நானே
கவிதையை
எழுதினேன்;

இப்போதெல்லாம்
கவிதையே
என்னைக்கொண்டு
தன்னை
எழுதிக்கொள்கிறது.

# ஒளியைத் தேடி

(தமிழ்க் கவிதைகள்)

சந்தக்கவிமாமணி

**தமிழழகன**

(மைய, மாநில அரசின்
பரிசுகளும் பாவேந்தர் விருதும்
பெற்ற பாவலர்)

**'கவிதாலயம்'**

5, திருவள்ளுவர் தெரு,
பாலகிருஷ்ணா நகர்,
திருவொற்றியூர்,
சென்னை-600019.

# வீதி வெளிச்சம்


- ஆசிரியர் : சந்தக் கவிமாமணி தமிழழகன் (வே. சண்முகம்)
- பிறந்த நாள் : 21-4-1930 (பகவான் மகாவீரர் பிறந்த சித்திரை உத்திர நாள். பிரதோட நேரம் மாலை 5-30 மணி.)
- உரிமை : ஆசிரியர்க்கு.
- முதற்பதிப்பு : ஏப்ரல் 1992.
- படிகள் : 1200.
- பக்கங்கள் : 128. (24+104)
- தாள் : 11.6 கி.கி. வெள்ளை.
- எழுத்து : 10 புள்ளி.
- அச்சகம் : மூவேந்தர் அச்சகம், இராயப்பேட்டை, சென்னை-600 014.
- முகப்பு ஓவியம் : ஓவியக் கவிஞர் அமுதோன்
- விலை : ரூபாய் 16
- நூல் கிடைக்கும் பிற இடங்கள் :

1. **பிரீதிஸ் ஏஜன்சி,**
   219/2 திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
   திருவொற்றியூர்,
   சென்னை-600 019.

2, **பாரி நிலையம்,**
   184, பிராட்வே,
   சென்னை-600 104.

3. **ஐந்திணைப் பதிப்பகம்,**
   பாரதி சாலை,
   திருவல்லிக்கேணி,
   சென்னை-600 005.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்
முனைவர் சி. பாலசுப்பிரமணியனார்
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
அவர்களின்

# முத்திரை முன்னுரை

சந்தக் கவிமாமணி தமிழழகன் அவர்கள் தமிழ்கூறும் நல்லுலகம் நன்கு அறிந்த கவிஞர் ஆவர். பல்லாண்டு காலமாக தம் அரிய கவிதைப் படைப்பால் தமிழ் நெஞ்சங்களில் நீங்காத இடம்பெற்றுத் திகழ்பவர். இவருடைய பாடல்களில் பிற கவிஞர் எவருக்கும் வாய்க்காத சந்த இன்பம் பாங்குறத் ததும்பி நிற்பதனால் இவர் 'சந்தக் கவி மாமணி' என்று தமிழ் மக்களால் அன்போடு அழைக்கப் படுகின்றார். 'தமிழழகன் கவிதைகள்' என இவர் முன்னாளில் எழுதிய கவிதைத் தொகுப்பு நூல் தமிழறிஞர் உலகத்தின் பாராட்டினையும் பாமர மக்களின் பாராட்டினையும் ஒருங்கே பெற்றது. இவரது கவிதைகள் தரம்மிக்க கவிதைகளாக—திறம்சான்ற கவிதைகளாக விளங்கக் காணலாம். மேலும் இவருடைய கவிதைகளைப் படிக்கும்போதே ஒரு மனக்கிளர்ச்சியை—ஒரு நடைத் துள்ளலினை ஏற்படுத்தும் என்பதனைக் கவிதைகளைப் படித்துப் பார்த்து அறிந்து கொள்ளலாம். சமுதாயம் பயன்பெற வேண்டுமென்ற நோக்கில் இவர் இயற்றியிருக்கின்ற கவிதைகள் பன்னெடுங்காலம் தமிழுலகில் வாழும் சீர்த்தி மிக்க கவிதைகள் ஆகும்.

'ஒளியைத் தேடி...' எனும் தலைப்பில் இப்பொழுது சந்தக் கவிமாமணி அவர்கள் இயற்றி, தமிழ் உலகிற்கு அளிக்கும் இக் கவிதைத் தொகுதி இயற்கைப் பரவலாகவே பெரும்பாலும் அமைந்துள்ளதனைக் காணலாம். பாவேந்தர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் எவ்வாறு 'அழகின் சிரிப்பு' எனும் நூலினை இயற்கையைப் போற்றும் வகையில் அதன்

பல்வேறு நலன்களைச் சித்திரிக்கும் வகையில் இயற்றி வெளி யிட்டாரோ, அதே போக்கில் சந்தக் கவிமணி தமிழழகன் 'ஒளியைத் தேடி...' எனும் கவிதைத் தொகுதியினை ஆக்கி அளித்துள்ளார்.

'ஒளியைத் தேடி' எனத் தொடங்கும் நூலின் முதற் பாடலே கவிஞரின் திறம்சான்ற புலமைக்குக் கட்டியம் கூறி நிற்கின்றது. சான்றாக அப்பாடல் அடிகளைக் காணலாம்.

'ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.
வழியை நாடி விரைகின்றேன்.
வாழ்வில் கூடிக் கரைகின்றேன்.
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்."

மேலும் இதே பாடலில்,

'நம்பிக் கையே அகல்ஆக்கி
காளும் அதையே புகல்ஆக்கி
அன்பு மனமும் திரிகொண்டே
அதற்கும் மேல்ஓர் நெறிகண்டே
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.'

என இடம்பெற்றிருக்கும் வரிகள் தத்துவக் கவிதையாக அமைந்துள்ளதனைக் காணலாம். மேலும் அடுத்து அமையும் அதே தலைப்பில் அமைந்துள்ள பாடல்களையும் காணலாம்.

'முடியா நீண்ட பயணம்தான்.
முனைப்பே தூண்டும் அயனம்தான்.
மடியாய் அதற்கே மயங்கவில்லை.
மனம்தான் சிறகு; தயங்கவில்லை!
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளைக் ஊடிக் கடக்கின்றேன்.'

'புதிய யுகத்தின் விடிவென்று
புகையும் அகத்தின் முடிவென்று
எதிலும் துணிச்சல் வரப்பெற்றேன்;
இதோஇதோநான் புறப்பட்டேன்!
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.'

என முத்தாய்ப்பாய் அமைந்துள்ள பாடல் இவ்வாறு முடிகின்றது: இந்தப் பாடல்களைப் படிக்கும்பொழுது சோர்ந்து துவண்டு கிடக்கும் நெஞ்சில் எழுச்சிகொண்டு புத்துலகம் சமைக்கப் பெறுவதனை நன்கு காணலாம்.

'கவிஞன் நான்!' எனும் தலைப்பில் தன் விமர்சனமாக எழுதியுள்ள கவிதை கவிஞரின் நிலையினை உயர்த்துகின்றது. அக்கவிதைகள் வருமாறு:

'அற்பு தத்தின்
சொற்ப தத்தில்
அந்த ரங்க
சந்தம் பொங்க
ஆடுவேன்;—கவி
பாடுவேன்.'

'பாட்டு வீணை
மீட்டும் ஆணைப்
பரவ சத்தின்
அருள்வ சத்தில்
பாய்குவேன்;—சிவம்
தோய்குவேன்.'

'வாணி அன்னை
பேணி என்னை
வைக்கும் அன்பில்
மொய்க்கும் இன்பம்
வைகுவேன்;—யுகம்
செய்குவேன்.'

'தீஞ்சொல் தானும்
ஊஞ்சல் ஆன
தெய்வம் நேரில்
கைவந் தூறத்
தேவையே;—என்றன்
சேவையே.'

மேற்காணும் பாடல் அடிகள் கவிஞரின் தன்னம்பிக்கையினை யும் சமூக ஈடுபாட்டினையும் ஒருங்கே புலப்படுத்தவல்லன வாகும்.

'வேண்டுகோள்' எனும் கவிதையில் அமைந்துள்ள

'வாழும் நம்பிக்கை
வளர்க்கும் அன்புக்கை
வழிகோத் தென்னை
நடக்கவிடு;—அதில்
தோளும் தோளுமாய்த்
தொடரச் சூழுமாய்த்
துயரும் கொன்று
துடைக்கவிடு.'

எனும் பாடல் சமுதாய முன்னேற்றத்திற்கு உதவுவதாகும்.

சந்த இன்பம் கரைபுரண்டு ஓடுவதனைத் 'தழுவல்' எனும் கவிதையில் திறம்படக் காணலாம்.

'புல்லில் அரும்பிவந்தாள்,—அழகி
பொட்டுத் துளிஎனவே.
சொல்லில் தழுவுகிறேன்,—அவள்மேல்
சுடராய் இழைவதற்கே!

மெய்யில் விளையவந்தாள்,—அழகி
மின்வேர்த் துளிஎனவே.
உய்யத் தழுவுகிறேன்,—அவள்மேல்
உழைப்பாய் உயர்வதற்கே!

மொட்டில் சிரித்துவந்தாள்,—அழகி
முத்துத் துளிஎனவே.
கட்டித்தழுவுகிறேன்,—அவள்மேல்
காற்றாய் மிதப்பதற்கே!'

மேலே காணும் பாடற் பகுதிகள் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

'கவிக்குருவி' எனும் தலைப்பில் அமைந்த கவிதை தத்துவத்தின் தேரோட்டமாய் அமைந்திருப்பதனைக் காணலாம்.

'குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.—நான்
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.'

'கருவில்உரு வாகிக்
கவித்திருவும் ஆகிப்
பெருவெளியின் மீதும்
பேரொளியைக் கோதும்
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.'

'காலமென்றன் கருவி;
கவிதை என்றன் அருவி.
ஓலமென்ற மேட்டில்
ஒளிச்சருகுக் கூட்டில்
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி'.

மேலே காணும் இம்மூன்று பாடல்களைப் படிக்கும்பொழுது நாமும் ஒரு குருவியாக — கவிக்குருவியாகவே மாறிவிடுகின்றோம்.

'கவிதை' எனும் தலைப்பில் கவிதைக்குக் கவிஞர் கொடுக்கும் விளக்கம் வருமாறு :

இந்தப் பாடலே சந்த இன்பத்திற்கும் வருணனைத் திறத்திற்கும் எடுத்துக்காட்டாக விளங்குகின்றது.

இது போன்றே 'அந்தி வந்தது' எனும் கவிதையின் முதற் பாடலும் கவிஞரின் வருணனைத் திறத்திற்குச் சான்று பகர்கின்றனவாய் அமைந்துள்ளது.

'அந்தி வந்தது, அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.
சிந்திச் சிந்தி இறைத்த பூக்கள்
சிற்பக் கோலம் பூண்டன;— அந்தச்
சிதரில் ஒளிப் புதரில் மனம்
சென்று சென்று மீண்டன.
அந்தி வந்தது, அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.'

'பத்தாம் பிறை' எனும் தலைப்பில் கவிஞர் பாடியுள்ள பாடலின் இறுதிப் பாடல் நினைந்து நினைந்து மகிழத்தக்க பாடலாகும்.

'சீவிய தென்னையின்
செவ்விள நீர்க்காய்
தெரிவது போன்ற நிலா;—துண்டாய்
விரிவது போன்ற நிலா;—வண்ணம்
ஓவியத் தூரிகை
ஊன்றிக் குழைக்க
உறைமடல் போன்ற நிலா;—பத்தாம்
பிறைமடல் தோன்றும் நிலா.'

இதே போன்று, 'பட்டாம்பூச்சி' எனும் தலைப்பில் அமைந்துள்ள அனைத்துப் பாடல்களும் சந்த இன்பம் மணக்க அமைந்துள்ளன.

'பூப்பறிக்கப் போனேன்;
பூ பறந்து போச்சு!
போனவண்ணம் பார்த்தேன்;
கானவண்ணப் பூச்சி!'

'பட்டுகண்டு போனேன்;
பட்டெனவே போச்சு!
தொட்டெடுக்கப் பார்த்தேன்;
துளித்துளிப்பொன் பூச்சி!'

'மயில்' என்ற தலைப்பில் கவிஞர் சந்தக் கவிமாமணி தமிழழகன் அவர்கள் பாடியுள்ள பாடல் முழுமையும் பலமுறை படித்துப் படித்துச் சுவைக்க வேண்டியதாகும்.

'பதுக்க முடியாய்
பவுன்முத் திரைநீ;
ஒதுக்க முடியா
ஓவியத் திரைநீ!

நட்டுவம் இன்றி
நடத்தும் கலைநீ;
கொட்டுமுழக் கின்றிக்
குதிக்கும் சிலைநீ!

உழைக்காப் புதுமை
உயிர்ப்(பு) அறு வடைநீ,
இழைக்கா இயற்கை
இலக்கியக் கொடைநீ!

நீலத் தோகையின்
நேர்துறை முகம்நீ,
கோலத் தனிஎழில்
கொட்டும் யுகம்நீ!

அழகு நடன
அரும்பத வுரைநீ;
மெழுகுப் பச்சையின்
மின்அலை நுரைநீ!

மழைக்கா லத்தின்
மருமகப் பிள்ளைநீ;
திளைக்க மரகதம்
திரண்டபொற் கிள்ளைநீ!

உயிராய்க் கிடைத்த
ஒளிப்புதை யல்நீ;
அயராது மகிழ்வேன்;
ஆடுக மயில்நீ!

'கொடி மின்னல்' குறித்தும், 'மழைப் பின்னல்' குறித்தும் கவிஞர் பாடியுள்ள பாடல்கள் முழுவதும் படிப்போர் அனைவரும் சுவைத்து மகிழவேண்டியதற்காக இயற்றப்பட்ட கவிதைகள் எனலாம். அக்கவிதைகள் வருமாறு :

'இருட்டழகி கழுத்தேறி
இடிமுழக்கும் அவள்நடனப்
பொருட்டசைந்து பளபளக்கும்
பொற்சரடோ, மின்னலடி?

கரியசுவர் மேல்இருந்து
காற்றினுக்குத் தக்கபடிச்
சரிகைஅலைந் தாடுமலர்ச்
சரக்கொடியோ, மின்னலடி?

குகைச்சுரங்கம் திறந்தஉடன்
கொடிபறிக்க ஓடிஎங்கும்
தொகைச்சுரங்கம் ஆனதங்கத்
தோரணமோ, மின்னலடி?

மழைநீரில் ஆடியவிண்
மங்கைதிசைக் கார்குழலில்
இழைநீவச் சிணுக்கெடுக்கும்
இங்கிதமோ, மின்னலடி?

மேகமடர் குகைவழியே
　　மெல்லஎட்டிப் பார்த்தமயில்
தோகைமடல் விரித்தபடித்
　　துள்ளுவதோ மின்னலடி?

நூல்வலைகள் தாம்விரித்தால்
　　நொடியில் விழா மீன்களென்று
மேல்வலைகள் தாம்விரித்த
　　விந்தைகளோ, மின்னலடி?

எண்ணமிலாச் சிந்தையுள்ளும்
　　இப்படியே பற்பலவாம்
வண்ணமெலாம் கொண்டுவரும்
　　வான்கொடையோ, மின்னலடி?

'மின்னல் ஊசி
வானத் திலே
என்ன பண்ணுது?—அது,
மேகப் பொத்தல்
அத்த னைக்கும்
தையல் பின்னுது!

வண்ண மழைக்
கம்பி இழை
என்ன பண்ணுது?—அது,
வானும் மண்ணும்
இணையச் சர
கூடம் பின்னுது!

கொட்டும் இடி
கொட்டம் அடித்(து)
என்ன பண்ணுது?—அது,
கும்மி அடித்
தோடி மரக்
கூந்தல் பின்னுது!

பொங்கி வரும்
நுங்கு வெள்ளம்
என்ன பண்ணுது?—அது,
புதுநுரையாய்
நாணிக் கோணிச்
சரிகை பின்னுது!

இத்தனையும்
பார்க்கப் பார்க்க
என்ன பண்ணுது?-நெஞ்சில்
இயற்கை என்று
வியக்கும் சக்தி
இன்பம் பின்னுது!

'நீர்க்குமிழி' என்ற தலைப்பில் கவிஞர் இயற்றியுள்ள பாடல்களில் முதல் இரண்டு பாடல்கள் கவிஞரின் கூர்ந்த நோக்குக்கு எடுத்துக்காட்டாய் இலங்குகின்றன.

'ஆறுவிடும் கண்ணீர்
அழுகைத்தொண தொணப்பு;
மாறுபடும் அந்நீர்
மவுனமுணு முணுப்பு.

கார்த்திகைநீ ரோடை
காட்டும்அகல் விளக்கு;
பார்த்துகையால் ஆடப்
பல்லாங்குழி அடுக்கு'.

இதுபோன்றே 'கடல்' குறித்தும் 'வானவில்' குறித்தும் கவிஞர் பாடியுள்ள பாடல்களில் ஒரு சில பகுதிகளைக் கீழே காணலாம். இவற்றில் கவிஞர், சங்ககாலக் கவிஞரை நினைவூட்டுவார் போல் சிந்தனைப் புரவியில் வேகமாகச் சென்று விந்தைக் கவிதை படைத்திருப்பதனைக் காண முடிகிறது.

'ஒன்றன்பின் ஒன்(று) அலைஓடும்;—அதில்
உன்னத வெண்ணுரை ஆடும்;—ஒளிக்
குன்றென வெள்ளியைக் கொண்டே உருக்கிய
கோலம் போல் அந்நுரைப் பாடும்—காணக் கூடும்.

'மீன்களும் ஆயிரம் மேயும்;—தண்ணீர்
மீதொரு வேளையில் பாயும்;—அவை
தான்கொத்திப் போகவே மீன்கொத்திப் புட்களும்
தந்திர மாய் அங்கே சாயும்;—ஏமாந்(து)—ஓயும்'.

'கட்டு மரம்பல காணும்;—அவை
காவியச் சித்திரம் பூணும்;—இன்னும்
எட்டும் அவைஎலாம் ஏறி இறங்கி
எழில்மகள் ஊஞ்சலாய்த் தோணும்—ஒரு—கோணம்'.

எனக் கடல் குறித்தும்,

'வானச் சாசனம்;
வர்ணப் பாசனம்;
வேனல் இயற்கையின்
விரிமயில் ஆசனம்!

ஊஞ்சல் மோகனம்;
ஒளிவில் வாகனம்;
தீஞ்சொற் கவிதையின்
திசைமகள் சீதனம்!

சொர்ண மாளிகை;
சொர்க்கத் தூளிகை;
வர்ணப் பீடமேல்
வான்மகள் ஆளுகை!'

என வானவில் குறித்தும் வருபவை இவற்றிற்குத் தக்க சான்று.

'வண்ணத்துப்பூச்சி' பற்றிக் கவிஞர் பாடியுள்ள பாடலின் எடுப்பும் தொடுப்பும் முடிப்பும் கவிஞரை முதல் தரக் கவிஞர் வரிசையில் இடம்பெறச் செய்கின்றன,

'ஜிகுஜிகு வண்ணத்துப் பூச்சி,-உன்
சிறகினில் எத்தனை வீச்சு!
வெகுசுக மாய்ப்பறந் தாச்சு;-உனை
விட்டதும் நல்லதாய்ப் போச்சு!'

'தங்கக் கடத்தல்கள் தான்நீ-செய்யத்
தந்திரம் கற்றதுன் மேனி;
அங்கங்(கு) அலைந்திடும் தேனீ-கூட
ஆவதில் லை உன்போல் கூனி!'

'ஜிகுஜிகு வண்ணத்துப்பூச்சி;-உன்பூஞ்
சிறகினில் எத்தனை வீச்சு;
வெகுசுக மாய்ப்பறந் தாச்சு;-எல்லாம்
வேடிக்கை யாய்ச் சொல்லப்போச்சு!'

'வேனல் விழா' எனும் தலைப்பில் அமைந்த கவிதை கவிஞரின் உவமைச் சிறப்பினை உள்ளபடியே அறிய முடிகின்றது.

'பட்டபாட் டிற்குப் பணப்புதை யல்போல்
பரிதியும் வந்தாச்சு;-தனி
உறுதியும் தந்தாச்சு!-இனி
விட்டது குளிரும் வெற்றிஎன் றேஇள
வேனல் விழவாச்சு;-யுக
மே, நல் உழவாச்சு!'

சிரிப்பு எனும் தலைப்பில் அமைந்துள்ள பாடல் வருமாறு :

'புல்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லிக்-காலைப்
பூம்பனி வைரமாய்
மின்னியது!'

இந்தப் பாடல் கவிஞரின் புலமை உணர்வு, கற்பனை வடிவம், கருத்து ஆகிய அனைத்தையும் விளக்கும் போக்கில் அமைந்திருப்பனைக் காணலாம்.

'கைத்திறன்' எனும் கவிதையில் முதலாவதாக அமைந்துள்ள பாடலும், இறுதியாக அமைந்துள்ள பாடலும்

உயர்தரக் கவிதைகள் என்பதில் ஐயமில்லை. அப்பாடல் அடிகள் வருமாறு :

'அந்தர வானவில் சிந்துரச் சேற்றினை
அள்ளி இறைத்தவர்யார்? பிறைச்
சந்திரக் கிண்ணிச் சரவிளக் கேற்றிச்
சற்றே மறைத்தவர்யார்?'

'கன்னியர் நுங்கிளம் கன்னங்கள் தோறும்
கவிதை குழைத்தவனே-பின்னும்
மன்னிய மாயமாய் மற்றென்ன ஐயம்?
மகிழ்ந்திவை விளைத்தவனே!'

'கவி அணங்கு' எனும் கவிதை மீண்டும் மீண்டும் படித்துச் சுவைக்கத் தக்க வகையில் அமைந்திருப்பதனைக் காணலாம்.

'காதலி அல்லள்; கவிதை அவள்!-வெறும்
கற்பனை அல்லள்; யுவதி அவள்!
ஆதலின் என்னுள் அயின்றனளே;—நவம்
ஆயிரம் மின்னப் பயின்றனளே!'

'வேண்டல்' எனும் தலைப்பில் அமைந்த கவிதையும் இதுபோன்றே சுவைத்து மகிழத் தக்கவகையில் அமைந்துள்ளது.

'கங்குலிலே சேலைநெய்து
கார்வில்லிலே மாலைகொய்து
திங்களிலே என்கழுத்தில்
சூட்டவா;—அன்றிஉன்
திருக்கரமே மாலைஎனப்
பூட்டவா!"

'நினைவு நிழலில்' எனும் கவிதை ஒரு நினைவுச் சித்திரம் என்பதனை, கவிதையைப் படித்தவுடனேயே ஒப்புக் கொண்டு விடலாம்.

'செண்பக ஓடையிலே-துள்ளும்
செந்தமிழ் மேடையிலே
கண்புகும் வேட்கையிலே-விழிக்
காந்தங்கள் தாக்கையிலே

பண்புகொள் நாட்களையே—எண்ணிப்
பன்னூறு பாக்களையே
விண்புகழ் பூத்தொலிப்பேன்;—காதல்
வெற்றிக்கே வாழ்த்தொலிப்பேன்!'

'புதுப்பாப்பா!' என்ற பாடல் ஒரு புதுக் கற்பனை எனலாம்.

'பாப்பா ஒண்ணு எங்க வீட்டில்
முளைச்சி ருக்குது;—அது,
படுத்துக்கிட்டே என்னைப்பார்த்துப்
பார்த்துச் சிரிக்குது.

கேட்பார் இல்லை; தரையில் எம்பிக்
காலை உதைக்குது;—அதன்
கிட்டப் போனால் பட்டுக்காலால்
எட்டி மிதிக்குது.

அம்மா கிட்டப் போகக் கையை
ஆட்டி அழைக்குது;—அவள்
அந்தப் பக்கம் மறைஞ்சு போனால்
வாயைப் பிளக்குது.'

இந்த மூன்று பாடல்களும் கடைசி இரண்டு பாடல்களாக அமைந்துள்ள,

'பாப்பா புதுப் பாப்பா அதோ
படுத்தி ருக்குது;—ஆசு
பத்திரிக்குப் போய்அம்மாதான்
வாங்கி வந்தது.

கேட்பார் இல்லை; பாப்பா பண்ணும்
கேலிக் கூத்திது;—இன்னும்
கேட்கக்கேட்கச் சொல்லு வேன்நான்;
நேரம் போதாது.'

என்பனவும் படித்துப் படித்து இன்புறத்தக்க வகையில் அமைந்துள்ளன. இது போன்றே 'வகிடு' என்ற கவிதையில் அமைந்திருக்கும் கீழ்க்காணும் பாடல்கள் கவிஞரின் கற்பனை ஆழத்திற்குக் கட்டியம் கூறி நிற்கின்றன.

'மேகத்தில் வகிடு
மின்னல் இழைத்தது;—தென்னை
மீதினில் வகிடு
தென்றல் வளைத்தது.'

'கடல்நீரில் வகிடு
கப்பல் கிழித்தது;—இரு
கன்னத்தின் வகிடோ
உப்பு துளிர்த்தது.'

'வயல்களின் வகிடு
வரப்பு கிடந்தது;—நில
வறட்சியின் வகிடு
வெடிப்பு தொடர்ந்தது.'

'கொல்லைமேல் வகிடு
குறும்பனி தைத்தது;—புற்றுக்
கூட்டமேல் வகிடு
எறும்(பு) அணி மொய்த்தது.'

'ஒற்றையடிப் பாதை' எனும் கவிதையும் 'அந்த நாள்' எனும் கவிதையும் பள்ளி நூல்களில் இடம்பெறத்தக்க இனிமையான கவிதைச் சித்திரங்களாகும். 'போலிகள்' எனும் கவிதைமெட்டு நம்மை வியப்பின் விளிம்பிற்கே அழைத்துச் செல்கின்றது.

'விளக்கினை ஏற்றிவிட்டுக்—காற்றை
விசிறவும் வைப்பாரோ?—உடல்
அழுக்கினைப் போக்கிவிட்டுச்—சேற்றை
அளையவும் துய்ப்பாரோ?'

இக்கவிதை 'தில்லை வெளியில் கலந்துவிட்டால் அவர் திரும்பியும் வருவாரோ?' எனும் வருணனை மெட்டில் அமைந்துள்ளது.

இறுதியாகக் 'கேள்விகள்' எனும் கவிதை, நூலின் முத்தாய்ப்பாய் அமைந்துள்ளது.

'சுதந்திரம் என்பதே
சுயநலம் பேணவா?—இல்லை;
இதந்தரும் நன்மைகள்
எல்லோரும் காணவா?'

'உரிமைகள் என்பதே
ஒருசிலர்க் கெட்டவா?—இல்லை;
பெருமைஎல் லோர்க்குமாய்ப்
பெரும்பயன் கிட்டவா'?

'கடமைகள் என்பதே
கண்துடைப் பாக்கவா?—இல்லை;
உடைமைகள் வந்திங்கே
உன்னதம் பூக்கவா?'

'மனிதர்நாம் என்பதே
மறந்து போகவா?—இல்லை;
இனிதுயிர் நல்கியும்
இந்தியர் ஆகவா?'

கவிஞர் நாட்டு நலம் நாடுபவர்என்பதற்கு இந்தக் கவிதையே தக்க சான்றாய்த் திகழ்கின்றது.

'ஒளியைத் தேடி...' எனும் கவிதைத்தொகுப்பினை உருவாக்கியுள்ள சந்தக் கவிமாமணி தமிழழகன் அவர்களின் கவிதைகள் அனைத்தும் முத்தான கவிதைகள்; முத்திரைக் கவிதைகள்; தமிழர் வாழ்வில் இன்பம் தழைக்கச் செய்பவை; கவிதையின் நலன்கள் எல்லாம் ஒன்றுதிரட்டி உருவெடுத்தது போன்ற இயற்கை எழில் பூத்துக் குலுங்கும் கவிதைகள்; சந்த இன்பம் ஒலிக்கும் கவிதைகள்; பண்பாடு நல்கும் புதுமைக் கவிதைகள்; மொழிக்கும் மொழி பயிலும் தமிழர்க்கும் தமிழ் வளர்க்கும் நாட்டிற்கும் தக்கதொரு தொண்டினைத் தம் கவிதைகளால் படைத்திருக்கும் சந்தக் கவிமாமணி தமிழழகன் வாழ்க! அவர் தம் கவிதைத் திறன் வளர்க! என வாழ்த்துகின்றேன்.

1-4-1992.
தஞ்சாவூர்.

சி. பாலசுப்பிரமணியன்

# சந்தக் கவிமாமணியின் சித்திரச் சிற்றுரை

தேடுதல் என்பதே உண்மையைத் தேடும் ஒரு முயற்சி வேள்விதான். அதிலும் ஒளியைத் தேடுதல் என்பது, உண்மையான கலைஞன் ஒருவனின் உயிர் வேட்கை ஆகும்.

அந்த வேட்கை வேள்வியில் அரை நூற்றாண்டுக் காலம் அவி சொரிந்துள்ள என் முயற்சிகளின் ஏதோ ஓர் ஐந்து விழுக்காட்டைத்தான் இத்தொகுப்பில் வெளி யிட்டுள்ளேன்.

கவிதை என்பது, பரந்துபட்ட ஒரு பெரும் கடல். அதற்குப் பலகோடி அலைக்கரங்கள் உண்டு. அவ் அலைக் கரங்களின் ஊடே நீந்தி நெளிந்து நீராடியும் நெடுமூச்சு அடக்கியவாறு மூழ்கியும் நான் எடுத்த நித்திலங்களின் ஒரு சில கோவைதான் இத்தொகுப்பு. பெரும்பாலும் அழகியல் தெறிக்கும் ஆணி முத்துகளையே இதில் தந்துள்ளேன். பிற பிற ஒளி இயல்பு உள்ளவை அடுத்து அடுத்துக் கோவா முத்தாரம், கோத்த மணியாரம் என்பனவாக வெளியிடப் பெறும்.

முப்பதாண்டுகளுக்கு முன், நான் நன்றியுடன் நினைவு கூரத் தக்க முறையில், திரு பழநியப்பா சகோதரர்களால் வெளியிடப் பெற்ற 'தமிழழகன் கவிதைகள்' எனும் என் நூலுக்குப் பிறகு, ஒரு தலைமுறை கடந்து, இத்தலை முறைக்கான நூல் இது என்பது போல் வெளி வந்துள்ள இத்தொகுப்பு விரைவில் வெளிவர வேண்டுமென்று பேராசிரி யர்கள் முதல் பெரும்பாலான கவிதைச் சுவைஞர்கள் வரை அனைவருமே அவ்வப்போது கருத்துகள் வெளியிட்டும் வற்புறுத்தியும் வந்தார்கள்.

அவர்களுள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் முனைவர் சி. பாலசுப்பிரமணியனார், முனைவர் சிலம்பொலி செல்லப்பனார் போன்றோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

முனைவர் சி. பாலசுப்பிரமணியனார் அவர்கள், தம் நூல் 'வாழையடி வாழை' என்பதன் மூலம், முதன் முதல் என் கவிதைகளைப் பாராட்டித் தமிழ் உலகிற்கு அறிமுகப்

படுத்தி வைத்தவர்கள். அவர்களே இத்தொகுப்பிற்குப் பெரிதும் மனம் உவந்து தஞ்சைப் பெருங்கோவில் கோபுரம் போல் தனித்துயர்ந்து நிற்கும் விரிவான முன்னுரை ஒன்றை வழங்கியுள்ளார்கள். அப்பேராசிரியப் பெருந்தகையை என்றென்றும் மறவேன்.

முனைவர் சிலம்பொலி செல்லப்பனார் அவர்கள் இலக்கிய அரங்குகள் எதிலுமே என் கவிதைகள் பலவற்றை விரிவாக விளக்கி அவற்றின்பால் மக்களை விருப்பம் கொள்ளச் செய்துவரும் சொல்மழை வித்தகர். அவருக்கும் என்றென்றும் நன்றியுடையேன்.

இந்நூல் வெளிவரப் பெரும் தூண்டுதலாக இருந்த மற்றொருவரையும் இங்கு நான் நன்றியுடன் குறிப்பிட வேண்டும். என் நெஞ்சின் நிழலும் நிலைத்த நண்பருமான கவிமாமணி திரு. நா. சீ. வரதராசன் அவர்களின் துடிப்பும் தூண்டுதலுமான முயற்சி இல்லை என்றால் இந்நூல் இவ்வளவு விரைவில் வெளி வந்திருக்காது. கவிதைகளைத் தேர்ந்து எடுத்தது முதல் அச்சகத்தில் கொடுத்தது வரை அவரின் பெருமுயற்சிதான் இத்தொகுப்பு. அவருக்கும் மிக்க நன்றியுடையேன் நான்.

மூவேந்தர் முத்து அவர்கள் நான் விரும்பியபடியே ஒத்துழைத்து, நூலை அழகுற அச்சடித்துத் தந்துள்ளார்கள். அவருக்கும் முகப்போவியத்தைக் கைவண்ணமும் மெய் வண்ணமுமாக சித்திரித்துத் தந்துள்ள ஓவியக் கவிஞர் அமுதோன் அவர்களுக்கும் என் நன்றி உரியன.

இத்தொகுப்பில் உள்ள கவிதைகளில் பெரும்பாலும் கலைமகள், அமுதசுரபி, கல்கி, தினமணி போன்ற தமிழ்ப் பத்திரிகைகளிலும் வானொலியிலும் ஏற்கெனவே வெளியானவைதாம். ஆகவே அவற்றின் ஆசிரியர்களுக்கும் வானொலி நிலையத்தாருக்கும் என் இதயம் கனிந்த நன்றி.

ஒளி, உதயம் ஆகிவிட்டது; விழி, விதையும் ஆகிவிட்டது; வழி, நம் இதயமும் ஆகிவிட வேண்டியதுதானே? வாருங்கள்; கை கோத்து நடப்போம்.

21-4-1992, அன்புடன்,

திருவொற்றியூர். தமிழழகன்.

# படைப்பு

தமிழ் நாடக மேடையின்

மறுமலர்ச்சிக்கு வித்திட்ட வரும்

புதிய புதிய உத்திகள் பல புகுத்தியவரும்

பெரும் பெரும் கலைஞர்களை உருவாக்கியவரும்

பெரியார் இயக்கப் பெருந்தகையும்

சீர்திருத்தச் செம்மலும்

கல்வி நிறுவனம் கண்டவருமான

**என் மாமனார்**

**நாடகப் பேராசிரியர், கலைமாமணி,**

**அமரர் திரு. எம். எஸ். முத்துகிருஷ்ணனார்**

அவர்களின்

இனிய.. நினைவிற்கு.

**தமிழழகன்**

# சந்த மணித்தமிழ்

மரபறிந்த தமிழ்அறிவு, மரபுகொளப்
புதுயாப்பை வனையும் மாண்பு,
சுரபிஎனப் பொங்கிஎழும் சொல்நளினம்,
சுவைநளினம் சுரக்கப் பாட்டில்
அரபியநற் குதிரைநடை, ஆற்றுநடை,
அருவிநடை அமையப் பாடித்
தருபிறவிக் கவிஞன்உயர் தமிழழகன்
சந்தமணித் தமிழே காண்போம்.

கவிமாமணி

**நா. சீ. வரதராசன்**

# ஒளியைத் தேடி

ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.
வழியை நாடி விரைகின்றேன்.
வாழ்வில் கூடிக் கரைகின்றேன்.
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.

பொழுதுத் துளியும் யாழாகப்
புலரி வெளியும் பாழாக
அழுதும் அதற்கே மாறாக
அருணோ தயத்தின் வேராக
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.

இதய மூலை ஆய்ந்திட்டேன்,
எண்ணச் சோலை பாய்ந்திட்டேன்.
உதய காலை புகுந்திட்டேன்.
ஓகோ பொய்தான் மிகுந்திட்டேன்.
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.

நம்பிக் கையே அகல்ஆக்கி
நாளும் அதையே புகல்ஆக்கி
அன்பு மனமும் திரிகொண்டே
அதற்கும் மேல்ஓர் நெறிகண்டே
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.

முடியா நீண்ட பயணம்தான்.
முனைப்பே தூண்டும் அயனம்தான்.
மடியாய் அதற்கே மயங்கவில்லை.
மனம்தான் சிறகு; தயங்கவில்லை.
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.

புதிய யுகத்தின் விடிவென்று
புகையும் அகத்தின் முடிவென்று
எதிலும் துணிச்சல் வரப்பெற்றேன்.
இதோ இதோநான் புறப்பட்டேன்.
ஒளியைத் தேடி நடக்கின்றேன்.
இருளை ஊடிக் கடக்கின்றேன்.

# கவிஞன் நான்!

அற்பு தத்தின்
சொற்ப தத்தில்
அந்த ரங்க
சந்தம் பொங்க
ஆடுவேன்;—கவி
பாடுவேன்.

எண்ணம் என்னும்
வண்ணம் மின்ன
எக்க ளிப்பின்
முக்கு ளிப்பில்
ஏறுவேன்;—விதி
மீறுவேன்.

மண்ட லத்துச்
சென்றெ டுத்து
மையம் பற்றி
வையம் சுற்றி
மாட்டுவேன்;—திறம்
காட்டுவேன்.

காலம் என்ற
ஞால மன்றில்
காட்சி யாவும்
சாட்சி மேவக்
காணுவேன்;—வெற்றி
பூணுவேன்.

திங்க ளோடு
தங்க ஊடு
தேனி லாவின்
வானில் மேவித்
தேறுவேன்;—இளைப்
பாறுவேன்.

சுந்த ரத்தின்
அந்த ரத்தில்
சொக்கும் காதல்
மிக்கும் போதை
சூழுவேன்;—என்றும்
வாழுவேன்.

காவி யங்கும்
காவி யங்கள்
நவநி லத்தின்
பவனி வைத்தும்
நல்குவேன்;—பொய்ம்மை
வெல்குவேன்.

பாட்டு வீணை
மீட்டும் ஆணைப்
பரவ சத்தின்
அருள்வ சத்தில்
பாய்குவேன்!—சிவம்
தோய்குவேன்.

வாணி அன்னை
பேணி என்னை
வைக்கும் அன்பில்
மொய்க்கும் இன்பம்
வைகுவேன்;—யுகம்
செய்குவேன்.

தீஞ்சொல் தானும்
ஊஞ்சல் ஆன
தெய்வம் நேரில்
கைவந் தூறத்
தேவையே;—என்றன்
சேவையே,



# வேண்டுகோள்

புதிய எண்ணங்கள்
புதிய வண்ணங்கள்
புதுவெள் ளம்போல்
பெருகவிடு.—அதில்
விதியின் சிந்தைகள்
விளைக்கும் நிந்தைகள்
விடுத்தின் பங்கள்
பருகவிடு.

வாழும் நம்பிக்கை
வளர்க்கும் அன்புக்கை
வழிகோத் தென்னை
நடக்கவிடு.—அதில்
தோளும் தோளுமாய்த்
தொடரச் சூழுமாய்த்
துயரும் கொன்று
துடைக்கவிடு.

சிந்தை வேகங்கள்
செயல்வி வேகங்கள்
செறிய மேலும்
வளர்ச்சிகொடு—அதில்
முந்தை மூடங்கள்
முனைந்த வேடங்கள்
முழுதும் சாய
எழுச்சிகொடு.

இதயம் கோருமாய்
இறைஞ்ச வேறுமாய்
இருப்ப தென்ன,
மனிதனொடு?—அவன்
கதையும் மானிடக்
கவிதை தானிடக்
கனிந்தெம் தாயே;
புனிதம்கொடு.



# பயணம்

நெஞ்சின் நிழலில்
நீள நடந்தேன்;
செஞ்சொற் கழலில்
சிகரம் அடைந்தேன்.

கேட்ட இடத்தில்
கிளர்ச்சி ஆனேன்;
பாட்டுத் தடத்தில்
பயணம் போனேன்.

வாழ்க்கைக் குகையுள்
வசந்தம் சொரிந்தேன்;
வேட்கைப் பகையுள்
விதிமேல் சரிந்தேன்.

இரவின் அகலில்
    இளமை வரைந்தேன்;
பரவும் பகலில்
    பசிமேல் கரைந்தேன்.

அழகின் மயக்கில்
    அமுதம் குடித்தேன்;
பழகி வியக்கும்
    பழைமை முடித்தேன்.

சிந்தை முகட்டில்
    சிறிதே களைத்தேன்;
சந்தைப் பகட்டில்
    சரிதம் வளைத்தேன்.

சொல்லின் அசுவம்
    சொடுக்கிமுன் விட்டேன்;
புல்லில் விசுவப்
    புதிரையே தொட்டேன்.



# தழுவல்

புல்லில் அரும்பிவந்தாள்,—அழகி
பொட்டுத் துளிஎனவே.
சொல்லில் தழுவுகிறேன்,—அவள்மேல்
சுடராய் இழைவதற்கே!

மெய்யில் விளையவந்தாள்,—அழகி
மின்வேர்த் துளிஎனவே.
உய்யத் தழுவுகிறேன்,—அவள்மேல்
உழைப்பாய் உயர்வதற்கே!

மொட்டில் சிரித்துவந்தாள்,—அழகி
முத்துத் துளிஎனவே.
கட்டித் தழுவுகிறேன்,—அவள்மேல்
காற்றாய் மிதப்பதற்கே!

விண்ணில் உருகிவந்தாள்,—அழகி
விரிநுண் துளிஎனவே.
மண்ணில் தழுவுகிறேன்,—அவள்மேல்
மடையாய்ச் சிரிப்பதற்கே!

நெஞ்சில் நெகிழ்ந்துவந்தாள்,—அழகி
நினைவுத் துளிஎனவே.
செஞ்சொல் தழுவுகிறேன்,—அவள்மேல்
சிந்தனை யாவதற்கே.

எண்ணும் வியப்பனைத்தும்—அழகி
இமைத்தாள், துளிஎனவே.
கண்ணுள் தழுவுகிறேன்,—அவளே
காவிய அகண்டமென்றே!



# கவிக்குருவி

குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.—நான்
குருவிஒருகுருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.

கருவில்உரு வாகிக்
கவித்திருவும் ஆகிப்
பெருவெளியின் மீதும்
பேரொளியைக் கோதும்
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.

பரசிவமாம் வெள்ளம்
பாய்ந்துணர்வை அள்ளும்.
வரசிவமாய் என்னை
வாழ்த்திடுவள் அன்னை.
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.

ஞானமென்ற யாழில்
நாதமென்ற பாழில்
ஊனமொன்று நீங்க
உயிர்ச்சிறகு தாங்கக்
குருவிஒரு குருவி,—சின்னக்
குருவிஒரு குருவி.

அந்தரத்துத் தென்னை
அயர்ந்து வரும் என்னை
வந்தமரச் சொல்லும்
வசைமனத்தைக் கொல்லும்,
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி;

நெல்லழகு மூக்கும்
நிறைபுவனம் தூக்கும்.
சொல்லமுதக் காற்றில்
சோதிமுளைக் கீற்றில்
குருவிஒரு குருவி;—சின்னக்
குருவிஒரு குருவி.

காலமென்றன் கருவி,
கவிதை என்றன் அருவி.
ஓலமென்ற மேட்டில்
ஒளிச்சருகுக் கூட்டில்
குருவிஒரு குருவி;—சின்னக
குருவிஒரு குருவி.

# கவிதை

கூளமாய்க் கலைந்தஉட்
குரல்மனப் பூக்களை
மேளமாய்ப் புனைந்தஎன்
மெய்விரல் நாடகம்.

என்னையே உருக்கி
இதயம்கொள் உணர்ச்சியில்
பொன்னையே பெருக்கும்
புதுச்சுடர் மந்திரம்.

வாகனக் கற்பனை
வசந்த விழாக்களில்
மோகனச் சொற்கொளும்
மூர்த்திதன் ஊர்வலம்.

நாக்குத் திரியில்
நர்த்தனம் ஆடி
வாக்குச் சுடர்தான்
வரையும் சாகசம்.

மூளியாய்க் கிடந்தஎன்
மொழும்கல் மனத்தினைக்
காளியாய்ப் படைத்தொளி
காட்டிய தரிசனம்.

# எழிலும் தொழிலும்

மின்னல் மரகத மேடையிலே—கதிர்ச்
செந்நெல் கரகம்முன் ஆடையிலே
முத்துப் பனித்துளி மொட்டுகள்நான்;—வைர
வித்து மணித்துளிச் சொட்டுகள்நான்.

உள்ளம் வெடித்த நிலங்களிலே—கண்ணீர்
வெள்ளம் வடித்த புலங்களிலே
உழைப்பவர் வேர்வை யுறுதுளிநான்;—அங்குக்
களைப்பவர் ஜீவச் சிறுதுளிநான்.

மஞ்சள் வெயில்வரும் மாலையிலே—கூடிக்
கொஞ்சக் குயில்வரும் வேளையிலே
மனம்முறிந் தோர்தம் மழைக்கண்ணீர்நான்;—கூலி
தினம்அறிந் தோர்தம் பிழைக்கண்ணீர்நான்.

அந்தர வான அடவியிலே—காயும்
சுந்தர சீனப் புடவையிலே
அள்ளி இறைத்த அழல்மலர்நான்;—கோலப்
புள்ளி நிறைத்த தழல்மலர்நான்.

எழில்என்றும் என்னை எழுதிடுவார்;—அதன்
தொழில்என்றும் என்னைத் தொழுதிடுவார்.
எழில்எனில் உள்ளேன்மெய் எண்ணத்திலே;—அதன்
தொழில்எனில் உள்ளேன்கை வண்ணத்திலே.



## எழிற் காலை

இரவெலாம் வானம்
கருவுயிர்த் தீன்ற
இளம்சிசுக் காலை;—தங்கப்
பழம்பசுங் காலை.—அதன்ஒளி
முறுவலாம் தேனைப்
பெறஎலாம் விம்மின,
மோகனச் சோலை;—தெய்வம்
ஆகநல் வேலை.

விரிகடல் எல்லாம்
சரிகைகள் பின்னி
விளையாடும் காலை;—வர்ண
இழையோடும் காலை.—அதன்தனி
மெருகொடும் கண்டேன்,
சருகுகள் தாமுமே
மின்னிடும் லீலை;—இளம்
பொன்னுடற் சேலை.

கிளைஎலாம் மேலும்
ஒளிமுலாம் கோலம்
கிறக்கிடும் காலை;—நிழல்
இறக்கிடும் காலை.—வியங்(து) அதன்
வழிநடந் தேக
நளினமாய்த் தென்றல்
வழிகாட்டும் சாலை;—எல்லாம்
எழில்கூட்டும் காலை.



# கதிர் மகள்

வர்ணக் குழம்போ?
வானப் பிழம்போ?
வருகுது பார், தம்பி! — அது,
சொர்ணக் குழம்பாய்ச்
சோதித் தழும்பாய்ச்
சுழலுது பார், எம்பி!

தங்கக் குடமோ?
தாமரைப் படமோ?
தழையுது பார், தம்பி! — அது,
பொங்கும் குடமாய்ப்
பூரிப் பிடமாய்ப்
பொலியுது பார், எம்பி!

வயிரமின் தட்டோ?
வார்கடல் திட்டோ?
வளப்(பு)அது பார்,தம்பி!—அது,
இயற்கையின் தட்டாய்
எழில்மகள் பொட்டாய்
ஏறுது பார்,எம்பி!

காலக் குளமோ?
ககனப் பழமோ?
கண்டவர் யார்,தம்பி?—அது,
மூலக் குளமாய்
முற்றும் வளமாய்
மூண்டது பார்,எம்பி!

மண்ணுக் கரசோ?
மன்னர் முரசோ?
மருவுது பார்,தம்பி!—அது,
கண்ணுக் கரசாய்க்
கடவுட் பரிசாய்க்
காண்பதும் பார்,எம்பி!

கங்குல் முடிவோ?
கவலை விடிவோ?
கதிர்முகம் பார்,தம்பி!—அது,
மங்கலக் காலை
மணமகள் கோல
மகிழ்ச்சியு மாம்,எம்பி!

# உதயம்

முன்னிருட் கங்குலில்
மின்னிய மீன்கணம்
முத்துப் பனியாச்சு;—புல்மேல்
இறைத்த மணியாச்சு.—வயசுக்
கன்னியும் செப்பொடு
தன்இல்லம் விட்(டு)ஆறு
காண நடந்தாச்சு;—கன்னத்தில்
நாணம் படர்ந்தாச்சு.

மேலை நெடுவானில்
கோல நிலாவட்டம்
மேனி வெளுப்பாச்சு;—உயிரோ(டு)
ஊனில் களிப்பாச்சு.—இளைய
காலை நளினிக்குக்
கட்டியம் கூறிப்பூங்
காவும் விழிப்பாச்சு;—கண்முன்னம்
யாவும் செழிப்பாச்சு.

ஓடை மதகுரீ
ரோ(டு)ஒளிச் செங்கதிர்
ஊடிச் சிலிர்த்தாச்சு;—நுரைநுரை
ஆடிச் சலித்தாச்சு.—முகிலில்
மூட மிடும்பனிக்
கூடம் விலகிநம்
முற்றம் எழிலாச்சு;—இயற்கையே
முற்றும் தொழிலாச்சு.

மாடப் புறாவும்செங்
காடைப்புள்ளும் திசை
மாறிப் பறந்தாச்சு;—சிவ்வென
ஏறி விரைந்தாச்சு.—அதனைப்
பாடப்பா டப்புதுப்
பாங்கில்பண் ணோடும்
பரவசம் உண்டாச்சு;—இறைவன்
அருள்வசம் கண்டாச்சு.

பழனச் சதிர்கொள்
வளநெற் கதிர்களும்
பாரில் படிஞ்சாச்சு;—துயரும்
ஊரில் விடிஞ்சாச்சு;—வீட்டின்
இழைநறும் கோலம்
எலாம்பரங் கிப்பூ
இதயம் மலர்ந்தாச்சு;—அடடே,
உதயம் புலர்ந்தாச்சு.



## விடியல் வியப்புகள்

வசந்தங்கள் பூத்து வரிசைஇடப்—பனி
வயிரங்கள் கோத்துத் தரிசைநட
அசைந்தெங்கும் நீள அவிநயமாம்;—தென்றல்
அமரபூ பாளக் கவிநயமாம்.

காலை அரும்புகள் கட்டியமாம்;—அவை
காணச் சுரும்புகள் முட்டியும்ஆம்;
கோல ரகசியம் கூறிடுமாம்;—அதில்
கோடி அவசியம் தேறிடுமாம்.

பொரிப்பொரிக் கிண்ணத்துப் பூச்சிகளாம்;—அலை
பொடிப்பொடி வண்ணத்துக் காட்சிகளாம்.
விரிப்பொடு பூம்பொழில் வீட்டில்களாம்;—அந்த
வியப்புக்குக் காம்பெழில் கட்டில்களாம்.

ஓடை அருவிகொள் உல்லாசம்தான்;—அங்கே
ஒதுங்கும் குருவிகள் நல்வாசம்தான்.
கூடை மலரும் கொலுஎனலாம்;—நிசிக்
கொத்தாய்ப் புலரும் நிலவெனலாம்.

பின்னும்என் னென்ன பிதற்றல்களாம்;—கிளிப்
பிள்ளைபோல் சொன்ன குதற்றல்களாம்.
சொன்னஒவ் வொன்றும் புதுநலம்தான்;—தெய்வ
சொர்க்கமாய் நின்ற குதூகலம்தான்.



## அந்தி வந்தது

அந்தி வந்தது அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.

சிந்திச் சிந்தி இறைத்த பூக்கள்
சிற்பக் கோலம் பூண்டன;—அந்தச்
சிதறில் ஒளிப் புதரில் மனம்
சென்று சென்று மீண்டன.
அந்தி வந்தது, அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.

குந்திக் குந்தி எழுந்த சிட்டுக்
குருவி மீண்டும் அமர்ந்தன;—அவை
கொத்திக் கொத்தி விழுந்த நெல்லின்
குவியல் யாண்டும் சுமந்தன.
அந்தி வந்தது, அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.

துள்ளித் துள்ளி வெள்ளிக் கிண்ணம்
　　தொலைவில் எங்கும் உருண்டன;—நிலாத்
துளிக ளென்னும் ஒளி அமுதச்
　　சுவையை மொண்டு புரண்டன.
　　　　அந்தி வந்தது, அந்தி;—ஒரே
　　　　அழகு தந்தது, முந்தி.

எள்ளி எள்ளி இறைத்த பொற்கா(சு)
　　எடுப்பார் இன்றிக் கிடந்தன;—அவை
எண்ணி எண்ணி முடியு முன்னே
　　இரவுப் படை தொடர்ந்தன.
　　　　அந்தி வந்தது, அந்தி.
　　　　அழகு தந்தது, முந்தி.

கோடி கோடிச் சிமிட்டல் கொண்டு
　　குறும்பு விழி பூத்தன;—அந்தக்
குறும்பு விழிப் பார்வை எல்லாம்
　　நிரம்ப மணி கோத்தன.
　　　　அந்தி வந்தது, அந்தி;—ஒரே
　　　　அழகு தந்தது, முந்தி.

ஓடி ஓடி மினுமி னிகள்
　　உயர உயர மொய்த்தன;—அந்த
உப்ப ரிகைக் காட னைத்தும்
　　ஒளிச்ச ரிகை தைத்தன.
　　　　அந்தி வந்தது, அந்தி;—ஒரே
　　　　அழகு தந்தது, முந்தி.

புலர்ந்து புலர்ந்(து) உலைக்க ளத்தின்
பொரித்து கள்கள் தெறித்தன;—அந்தப்
போர்க்க ளத்தில் மகைகை ளெல்லாம்
பூவாணமாய்ச் சிரித்தன.
அந்தி வந்தது, அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.

கலந்து கலந்(து) இருளும் ஒளியும்
கண்ணா மூச்சே ஆடின;—அந்தக்
கால முறை ஆட லுக்கும்
கவிதை வீச்சே கூடின.
அந்தி வந்தது, அந்தி;—ஒரே
அழகு தந்தது, முந்தி.



## தெய்வ தீபம்

நீண்டு சிவந்து
    நிமிர்மிள காய்எனத்
தூண்ட எரியும்
    தூமணித் தீபம்.

சிவந்தும் மலராய்ச்
    செம்ப ருத்தியின்
குவிந்த மொட்டுபோல்
    கொழும்சுடர்த் தீபம்.

பழுத்த மாதுளைப்
    பழமே தொங்கிடத்
திளைத்த காட்சிபோல்
    திகழ்வுறும் தீபம்.

தாரை மழைநீர்
தரைமேல் விழுகையில்
நேரும் குமிழ்போல்
நிரம்பிடும் தீபம்.

செக்கச் சிவந்து
சிலிர்த்திடும் கோழியின்
தக்க கொண்டைபோல்
தழல்பெறும் தீபம்.

தாழப் பூத்தும்
தழைக்கும் நாண
வாழைப் பூப்போல்
வரிசைகொள் தீபம்.

புதியது கண்டஅப்
போதேவிஞ் ஞானியின்
சுதிஒளிக் கண்கள்போல்
ஜொலித்திடும் தீபம்.

காந்தள் விரல்எனும்
கைவிளக்(கு) ஏந்தியே
பூந்தண் அழகியர்
புனைந்திடும் தீபம்.

முத்து விளக்(கு) இதழ்
முறுவலில் ஏற்றுவோர்
குத்து விளக்கெனக்
கொலுவிடும் தீபம்.

குடும்ப விளக்கெனும்
குலமட வார், கைப்
படும்பொன் விளக்கெனப்
பளிச்சிடும் தீபம்.

பனித்துளிக் காலைப்
பரிசுக்(கு) இரவெலாம்
தனித்துளித் துளியாய்த்
தவம்செயும் தீபம்.

இருளுக்கு வான்உடு
ஏற்றிடக் கண்டே
அருளுக்கு வையகம்
ஆராட்டும் தீபம்.



## ஏன் போனாள்?

கோலமிடப் புள்ளிஇட்டுக்
    கோடிழுக்கா முன்னம்
வாலைநிலாக் கிண்ணிவிட்டேன்
    வஞ்சஇரா போனாள்?

மல்லிகைப்பூக் குவியலிட்டு
    மாலைகட்டா முன்னம்
மெல்லநிலாக் கூடைவிட்டேன்
    மின்னல்இரா போனாள்?

தாதியரோ(டு) ஆட்டமிட்டுத்
    தண்ணீர்கொளா முன்னம்
சோதிநிலாக் குடத்தைவிட்டேன்
    சொக்கிஇரா போனாள்?

அரங்கெனவே தோரணமிட்(டு)
ஆடவரா முன்னம்
மருங்கில்நிலா முரசைவிட்டேன்
மங்கைஇரா போனாள்?

பெண்கள்புடை சூழவிட்டுப்
பேணிக்கொளா முன்னம்
கண்கொள்நிலாக் குழந்தைவிட்டேன்
கன்னிஇரா போனாள்?

போனதென்ன காரணமோ?
புரியவில்லை யேனும்
வானவன்தன் காதலிக்கே
வாழ்த்துரைக்க லானேன்.



# பத்தாம் பிறை

கூடைக்கு ளேசிறு
கூடை கவிழ்த்திய
கோலமே போன்ற நிலா;—வெள்ளித்
தாலமே போன்ற நிலா.—மலர்
மேடைக்கு மத்தியின்
மீதொளி ஆசன
மிட்டது போன்ற நிலா;—முறத்
தட்டது போன்ற நிலா.

அல்லிக் குளத்தின்
அரும்தா மரைஇதழ்
ஆடுதல் போன்ற நிலா;—அன்னம்
ஓடுதல் போன்ற நிலா.—கலா
வல்லிக்(கு) இயற்கையே
வாழ்த்திய ஆரத்தி
வட்டத்தைப் போன்ற நிலா;—தெப்ப
மட்டத்தைப் போன்ற நிலா.

சித்திர முத்தைச்
சிறப்பாய்க் கருக்கொளும்
சிப்பியைப் போன்ற நிலா;—பட்டுத்
தொப்பியைப் போன்ற நிலா.—மிகப்
பத்திர வேலைகொள்
பாங்குடன் தோன்றும்
பதக்கத்தைப் போன்ற நிலா;—சிற்பச்
சதுக்கத்தைப் போன்ற நிலா.

சீவிய தென்னையின்
செவ்விள நீர்க்காய்
தெரிவது போன்ற நிலா;—துண்டாய்
விரிவது போன்ற நிலா.—வண்ணம்
ஓவியம் தூரிகை
ஊன்றிக் குழைக்க
உறைமடல் போன்ற நிலா;—பத்தாம்
பிறைமடல் தோன்றும் நிலா.

# பட்டாம்பூச்சி

பூப்பறிக்கப் போனேன்;
பூபறந்து போச்சு!
போனவண்ணம் பார்த்தேன்;
காணவண்ணப் பூச்சி!

படம்எழுதப் போனேன்;
படம்எழுந்து போச்சு!
தடம்மருண்டு பார்த்தேன்;
தகத்தகாயப் பூச்சி!

மின்னல்கிள்ளப் போனேன்;
மின்னல்துள்ளிப் போச்சு!
என்னஎன்று பார்த்தேன்;
இந்திரவில் பூச்சி!

பட்டுகண்டு போனேன்;
பட்டெனவே போச்சு!
தொட்டெடுக்கப் பார்த்தேன்;
துளித்துளிப்பொன் பூச்சி!

சுடர்அணைக்கப் போனேன்;
சுடர்தெறித்துப் போச்சு!
அட, வியந்து பார்த்தேன்;
அடடா, பட்டாம் பூச்சி!



# மயில்

பதுக்க முடியாப்
    பவுன்முத் திரைநீ;
ஒதுக்க முடியா
    ஓவியத் திரைநீ!

நட்டுவம் இன்றி
    நடத்தும் கலைநீ;
கொட்டுமுழக் கின்றிக்
    குதிக்கும் சிலைநீ!

உழைக்காப் புதுமை
    உயிர்ப்(பு) அறு வடைநீ;
இழைக்கா இயற்கை
    இலக்கியக் கொடைநீ!

நீலத் தோகையின்
    நேர்துறை முகம்நீ;
கோலத் தனிஎழில்
    கொட்டும் யுகம்நீ!

அழகு நடன
    அரும்பத வுரைநீ;
மெழுகுப் பச்சையின்
    மின்அலை நுரைநீ!

மழைக்கா லத்தின்
    மருமகப் பிள்ளைநீ;
திளைக்க மரகதம்
    திரண்டபொற் கிள்ளைநீ!

உயிராய்க் கிடைத்த
    ஒளிப்புதை யல்நீ;
அயராது மகிழ்வேன்;
    ஆடுக மயில்நீ!



# கொடி மின்னல்

இருட்டழகி கழுத்தேறி
    இடிமுழக்கும் அவள்நடனப்
பொருட்டசைந்து பளபளக்கும்
    பொற்சரடோ, மின்னலடி!

கரியசுவர் மேல்இருந்து
    காற்றினுக்குத் தக்கபடிச்
சரிகைஅலைந் தாடுமலர்ச்
    சரக்கொடியோ, மின்னலடி?

குகைச்சுரங்கம் திறந்தஉடன்
    கொடிபறிக்க ஓடிஎங்கும்
தொகைச்சுரங்கம் ஆனதங்கத்
    தோரணமோ, மின்னலடி?

மழைநீரில் ஆடியவின்
    மங்கைதிசைக் கார்குழலில்
இழைநீவச் சீணுக்கெடுக்கும்
    இங்கிதமோ, மின்னலடி?

மேகமடர் குகைவழியே
    மெல்லஎட்டிப் பார்த்தமயில்
தோகைமடல் விரித்தபடித்
    துள்ளுவதோ, மின்னலடி?

நூல்வலைகள் தாம்விரித்தால்
    நொடியில்விழா மீன்களென்று
வேல்வலைகள் தாம்விரித்த
    விந்தைகளோ, மின்னலடி?

எண்ணமிலாச் சிந்தையுள்ளும்
    இப்படியே பற்பலவாம்
வண்ணமெலாம் கொண்டுவரும்
    வான்கொடையோ, மின்னலடி?



## மழைப் பின்னல்!

மின்னல் ஊசி
வானத் திலே
என்ன பண்ணுது?—அது,
மேகப் பொத்தல்
அத்த னைக்கும்
தையல் பின்னுது!

வண்ண மழைக்
கம்பி இழை
என்ன பண்ணுது?—அது,
வானும் மண்ணும்
இணையச் சர
கூடம் பின்னுது!

கொட்டும் இடி
கொட்டம் அடித்(து)
என்ன பண்ணுது?—அது,
கும்மி அடித்
தோடி மரக்
கூந்தல் பின்னுது!

பொங்கி வரும்
நுங்கு வெள்ளம்
என்ன பண்ணுது?—அது,
புதுநு ரையாய்
நாணிக் கோணிச்
சரிகை பின்னுது!

இத்தனையும்
பார்க்கப் பார்க்க
என்ன பண்ணுது?—நெஞ்சில்
இயற்கை என்ற
வியக்கும் சக்தி
இன்பம் பின்னுது!



## அருவி

கழற்சிக் காய்எனக்
கரைநீர்த் திவலைகள்
சுழற்சியாய் ஆடும்
சுந்தர நாட்டியம்.

கோணமாய்ச் சார்த்திய
குன்றெனும் வீணைமேல்
பாண நதிமகள்
பண்ணும்ஆ லாபனம்.

சாரல் மலைகொளும்
    சங்கீத மேடையில்
ஊரல் நதிகொளும்
    ஊர்த்துவ தாண்டவம்.

மலைமங் கையின்
    மார்பக மென்துகில்
நிலைமை நழுவி
    நேர்புரள் காவியம்.

வெள்ளி இழைகள்
    விதம்விதம் கொழிக்கத்
துள்ளி அலைகள்
    தொடரும் மாதவம்.

வீழ்ச்சிஎன் றாலே
    வெறுப்பவர் கூட,நீர்
வீழ்ச்சிஎன் றாலே
    விரும்பும் சாகசம்.



## புது வெள்ளம்

வெள்ளமோ வெள்ளம்!—புது
வெள்ளமோ வெள்ளம்!

பொங்கு திரை
நுங்கு நுரைப்
புனல்வ ழியும் வெள்ளம்;—சுழன்(று)
அங்கு வளைச்
சங்கு களை
அலைஅ லையாய் அள்ளும்.
வெள்ளமோ வெள்ளம்!—புது
வெள்ளமோ வெள்ளம்!

குமிழி யொடும்
உமிழி இடக்
கொப்பு ளங்கள் நீந்தும்;—ஒளிச்
சிமிழி எனத்
தமிழர் மனைக்(கு)
ஒப்ப விளக் கேந்தும்.
வெள்ளமோ வெள்ளம்!—புது
வெள்ளமோ வெள்ளம்!

நன்செய் வளம்
புன்செய்க் களம்
நானி லமும் பாயும்;—மிக
அஞ்சி விட
மிஞ்சி நெடும்
ஆறு கடல் சாயும்.
வெள்ளமோ வெள்ளம்!—புது
வெள்ளமோ வெள்ளம்!

அணைம தகும்
இணைம தகும்
அரிக்க இரைந் தோடும்;—வெள்ளிப்
பணமும் நுரைக்
கணமும் ஒரு
பணயம் எறிந் தாடும்.
வெள்ளமோ வெள்ளம்!—புது
வெள்ளமோ வெள்ளம்!

## நீர்க்குமிழி

ஆறுவிடும் கண்ணீர்
அழுகைத்தொண தொணப்பு;
மாறுபடும் அந்நீர்
மவுனமுணு முணுப்பு.

கார்த்திகைநீ ரோடை
காட்டும்அகல் விளக்கு;
பார்த்துகையால் ஆடப்
பல்லாங்குழி அடுக்கு.

துள்ளுபுனல் மீறித்
துவளுமலர் மொட்டு;
கொள்ளைமகிழ் நீரின்
கோலப்பொடிப் பொட்டு.

இளம்சிறுவர் ஆடி
எறிந்தரச குண்டு;
குளம்சிரிக்கப் பாடிக்
கொழிக்கும்இசை வண்டு.

நீலமயில் தோகை
நீண்டவிழிச் கிமிட்டு;
காலமெய்யை ஆக,
காட்டும்கண நிமிட்டு.

நீரினுள்ஓர் நாகம்
நெடுமூச்செறி கொதிப்பு;
ஊரிலுள்ளோர் தாகம்
உணர்த்துமறு பதிப்பு.

தேன்எனவே ஓடித்
திளைக்கும்நுரை எறும்பு;
மீன்அலைக்குள் ஊடி
மீட்டும்சிறு குறும்பு.

நாணமிடும் ஓடை
நளினவிழி வெட்டு;
பூணழகுக் கூடைப்
பூவின்செடித் தட்டு.

குலைஅறுந்து போன
    கொடிமுந்திரித் திரட்டு;
மலைஉருண்ட தான
    மணிக்கம்பளப் பகட்டு.

அருவிஜல தரங்கம்
    அடுக்கும்சுரக் கொழிப்பு;
மருவிமன அரங்கம்
    மலரும்கிளு கிளுப்பு.

நீர்த்தடத்தின் மீதே
    நிமிரும்தலைச் சிட்டு;
பார்த்திருக்கும் போதே
    பதுங்கும்உடை பட்டு.

மூழ்கியநீர்க் காக்கை
    முட்டைஅணி வகுப்பு;
வாழ்கஎனும் வாழ்க்கை
    மறையும்உயிர்த் தொகுப்பு.

நிலையாமை மேவி
    நிலைத்தஉயிர்ச் சான்று;
கலையாய்என் பாவின்
    கட்டியம்இஞ் ஞான்று.

மீன்பிடிக்கும் வலையின்
    மிதக்கும்கன முடிப்பு;
வான்உடுக்கள் தொலைவூர்
    வலமோகனப் படைப்பு.

திடீர்மழையால் வந்த
    திகைப்புக்குறி யீடு;
அடைமழையால் இந்த
    ஆணிமுத்துக் காடு.



# கடல்

ஒன்றன்பின் ஒன்(று)அலை ஓடும்;—அதில்
உன்னத வெண்ணுரை ஆடும்;—ஒளிக்
குன்றென வெள்ளியைக் கொண்டே உருக்கிய
கோலம் போல் அந்நுரைப் பாடும்—காணக்
கூடும்.

மீன்களும் ஆயிரம் மேயும்;—தண்ணீர்
மீதொரு வேளையில் பாயும்;—அவை
தான்கொத்திப் போகவே மீன்கொத்திப் புட்களும்
தந்திர மாய்அங்கே சாயும்;—ஏமாந்(து)
ஓயும்.

கட்டு மரம்பல காணும்;—அவை
காவியச் சித்திரம் பூணும்;—இன்னும்
எட்டும் அலைஎலாம் ஏறி இறங்கி
எழில்மகள் ஊஞ்சலாய்த் தோணும்,—ஒரு
கோணம்.

பதுங்கிட மண்வளை பார்க்கும்;—பின்னும்
பறித்த மணல்குழி சேர்க்கும்;—தரை
ஒதுங்க அந் நண்டினம் ஊர்ந்து வருமுன்னே
ஓடி வரும்அலை தூர்க்கும்;—தன்னுள்
ஈர்க்கும்.

கொத்தொடு முத்தம் கொழிக்கும்;—எல்லாம்
கொண்டுநீ ராழம் ஒளிக்கும்;—மிகப்
பித்தொடு பித்தாய்ப் பிதற்றிடு வார்போல்
பெருமூச் செறிந்து பழிக்கும்;—தண்ணீர்
தெளிக்கும்.

பளபளக் கும்வைரப் பாலம்—இட்ட
பாற்கடல் காணிரோ, மேலும்;—அதில்
களைபெற ஞாயிறு கால்ஊன்றி ஏறவும்
கைதொழப் போம்இந்த ஞாலம்—தெய்வக்
கோலம்.



## வானவில்

வானச் சாசனம்;
வர்ணப் பாசனம்;
வேனல் இயற்கையின்
விரிமயில் ஆசனம்.

ஊஞ்சல் மோகனம்;
ஒளிவில் வாகனம்;
தீஞ்சொற் கவிதையின்
திசைமகள் சீதனம்.

சொர்ண மாளிகை;
சொர்க்கத் தூளிகை;
வர்ணப் பீடமேல்
வான்மகள் ஆளுகை.

நவமணிப் பட்டியல்;
நளினமின் வெட்டியல்;
குலைமணிச் சரடெனக்
கோத்தபொன் அட்டியல்.

கதம்பத் தோரணம்;
கவர்ச்சிப் பூரணம்;
விதம்பல செய்திடும்
வேடிக்கை காரணம்.

கற்பனை ஆலயம்;
காவிய மாலயம்;
சிற்பநல் ஓவியச்
சிந்துரச் சாலையும்.

வரையாச் சித்திரம்;
வசந்தன் கைத்திறம்;
அரையாய் வளைந்தவில்!
அம்பில்லை; பத்திரம்!



# வண்ணத்துப் பூச்சி

ஜிகுஜிகு வண்ணத்துப் பூச்சி,—உன்
சிறகினில் எத்தனை வீச்சு!
வெகுசுக மாய்ப்பறந் தாச்சு;—உனை
விட்டதும் நல்லதாய்ப் போச்சு!

அழகழ காயிரம் வண்ணம்—கொள்நீ
அங்கங்கு தாவிடும் எண்ணம்
பழகினதெங்கு? சொல்; திண்ணம்—உன்போல்
பறந்திட ஆவல்மண் விண்ணும்!

கொள்ளைவர் ணங்களைக் கொண்டே—உனைக்
கொழித்ததில் யாரின்பங் குண்டே?
அள்ளக் குறையாது கண்டே—மனம்
ஆசையில் போகும்து வண்டே!

தகதகப் பூம்பொடித் தங்கம்—என
தான்மின்ன எத்தனை அங்கம்!
மிகமிக மேனிகொள் எங்கும்—சுக
மெல்லிய ராகங்கள் பொங்கும்!

சிறகென்ன, சித்திரப் பட்டா?—இல்லை;
செங்கீற்று மின்னலின் வெட்டா?
பிறகென்ன; மல்லிகை மொட்டா?—அட,
பிடிபடாச் சொல்லின் பகட்டா?

மலர்தொறும் சென்று சென் றமர்ந்தும்—கொண்ட
மாயங்கள் தாம்மக ரந்தம்!
உலருமுன் தேன்சிற கந்தம்—புள்ளி
ஓவியம் புனையுமோ வந்தும்?

தங்கக் கடத்தல்கள் தான்நீ—செய்யத்
தந்திரம் கற்றதுன் மேனி;
அங்கங்(கு) அலைந்திடும் தேனீ—கூட
ஆவதில் லை உன்போல் கூனி!

காதலி என்னவள் கன்னம்—எனக்
கனிந்துன் சிறகுகள் மின்னும்;
ஆதலின் உன்னையே இன்னும்—தொடர்
ஆசைகள் என்னையே தின்னும்!

பூவுக்குப் பூமெல்லத் தாவும்—துளிப்
போதிலும் உல்லாசம் தூவும்
வாழ்வுக்கு நீஎங்கு லாவும்—தெய்வ
வரங்களைப் பெற்றனை யாவும்?

குங்குமம் மஞ்சள் குளித்துப்—பல
கோலங்கள் இன்னும் தெளித்துத்
துங்கமின் வெட்டும் துளிர்த்து—நீகொள்
துள்ளலும் ஏன்? சொல் களித்து!

வாய்ப்புகள் எவ்வெவர் வாழ்வும்—தொட்டு
வருவது போல்எந்தப் பூவும்
மேய்ப்புகள் கொண்டிட மேவும்—விந்தை
மேன்மைஉன் பால்அன்றோ நீவும்.

வசந்தமும் நின்வர வேற்கும்;—சொர்க்க
வாசலும் நீவரப் பார்க்கும்;
அசைந்தசைந் தேமது வார்க்கும்—மலர்
அணிக்கும்நின் மேல்அன்றோ நோக்கம்!

சுறுசுறுப் புக்கோர் பொறுப்பே,—உன்
சுறுசுறுப் பென்றும் சிறப்பே;
மறுபிறப் புக்கோர் விருப்பே—எனில்
மகிழ்வதும் நான்உன் பிறப்பே!

ஜிகுஜிகு வண்ணத்துப் பூச்சி;—உன்பூஞ்
சிறகினில் எத்தனை வீச்சு!
வெகுசுக மாய்ப்பறந் தாச்சு;—எல்லாம்
வேடிக்கை யாய்ச்சொல்லப் போச்சு!

## வேனல் விழா

வசந்த மகட்கோர் வரவேற் பெனப்பொடி
வாரி இறைச்சாச்சு;—வர்ணம்
தூறி நிறைச்சாச்சு!—காற்றில்
அசைந்தசைந் தேஅலை ஆயிரம் பூமத்தாப்(பு)
ஆட்சியும் உண்டாச்சு;—பட்டாம்
பூச்சியும் கண்டாச்சு!

காமனும் தன்வில்லைக் கைவிட்டுப் போகக்
ககனவில் ஈர்ப்பாச்சு;—எழில்
மிகநவில் வார்ப்பாச்சு!—கோடிப்
பூமன்னும் சித்திரப் பொன்மக ரந்தமும்
பூக்கோலம் இட்டாச்சு;—பனி
மாக்கோல மொட்டாச்சு!

மூண்டெழும் வெள்ளலை மோதிக் கடலும்
முழக்கும் முரசாச்சு;— தெம்போ(டு)
அழைக்கும் அரசாச்சு!—காலம்
பூண்டெழும் மற்றொரு பூரிப்(பு) இதுஎனும்
பூரணம் இன்றாச்சு;—இன்பத்
தோரணம் நன்றாச்சு!

மரந்தளி ரும்கிளி மாயமும் வான்திசை
மாறிய காடாச்சு;—நிலா
ஏறிய மேடாச்சு!—வாணி
சார்ந்தொளி நெஞ்சமும் சாந்தியும் அன்புமாய்ச்
சத்தியம் பூத்தாச்சு;—அருள்
நித்தியம் கூத்தாச்சு!

பூத்துப் பொலிந்திடப் பூரணி வாஎனப்
பூங்குயில் பாட்டாச்சு;—அதோ
மாங்குயில் கேட்டாச்சு!—கூட
வாழ்த்தும் வரவேற்பும் வைகறை யாய்உஷை
வாசல் படைச்சாச்சு;—நம்முள்
பூசல் உடைச்சாச்சு!

பட்டபாட் டிற்குப் பணப்புதை யல்போல்
பரிதியும் வந்தாச்சு;—தனி
உறுதியும் தந்தாச்சு!—இனி
விட்டது குளிரும் வெற்றிஎன் றேஇள
வேனல் விழவாச்சு;—யுக
மே, நல் உழவாச்சு!

# வசந்த முத்திரை

வந்த னத்துடன் சந்த னத்தமிழ்
வாரி வாரி இறைக்கிறாள்;
வண்ண வண்ணமும் கிண்ணம் கிண்ணமும்
வாங்கிப் பூவாய் நிறைக்கிறாள்.

சிந்து சிந்தெனப் பந்து பந்தெனச்
செம்மாங் காயும் புடைக்கிறாள்;
சிந்து நாடகம் தந்த தோ(டு) அகம்
ஜீவ காவியம் படைக்கிறாள்.

முந்து முந்தெனத் தந்த னம்தன
மோகப் பாடல் வடிக்கிறாள்;
முல்லை கொல்லையில் மெல்ல எல்லையில்
மூத ரும்பும் வெடிக்கிறாள்.

இந்த விந்தையில் நம்தம் சிந்தையில்
ஏற்றம் காண வரிக்கிறாள்;
இன்பச் சித்திரை அன்பு முத்திரை
ஏதும் தானாய்ப் பொறிக்கிறாள்.

# வசந்த ராகம்

பூக்களைக் கொண்டே பொழுதெலாம் தென்றலின்
புத்துயிர் சுவாசிக்கும்;—தேன்
ஈக்களைக் கொண்டே இயல்இசை நாடக
இங்கிதம் வாசிக்கும்.

சலசல ஓடையில் சங்கீத வீணைகள்
சந்தங் களைமீட்டும்;—அந்தக்
கலைகொளும் வீணைக் கமகங் களின்திறம்
கந்த ருவம்கூட்டும்.

மாந்தளிர்த் தோரண மையலில் சிக்கி
மனம்களி வண்டாடும்;—கொடிப்
பூந்தளிர் கோதிப் புனைகுயில் சிட்டுகள்
புண்ணியப் பண்பாடும்.

அரும்(பு)அவி ழாதபல் ஆயிரம் மொட்டுகள்
ஆங்காங்கு கண்வெட்டும்;—பனிக்
குறும்புக ளாய்அங்குக் கொப்புளிக் கும்தளிர்
கோபுர விண்முட்டும்.

வசந்த வருகையை வாஎனச் சொல்லிமெய்
வாலிபம் வரவேற்கும்;—துணை
இசைந்(து)அநு ராக இதயங்கள் எல்லாம்
இணைந்து கரம்கோக்கும்.

## பனிப்பரல்கள்

புள்ளியாய் இறைத்த
    பூம்பனிக் கூளங்கள்;
வெள்ளியாய் நிறைத்த
    வெண்மணிச் சோளங்கள்.

மாப்பொடி நன்கு
    மலர்த்திய கோலங்கள்;
பூப்படி மம்கொள்
    பொரிப்பொரி ஜாலங்கள்.

கண்மூடித் தெளித்த
    கண்ணாடித் தூவல்கள்;
விண்மூடித் துளிர்த்த
    வேடிக்கைச் சீவல்கள்.

பால்நிலாச் சிட்டின்
    பருவமென் முட்டைகள்;
வேனிலாத் திட்டின்
    விடியல்கண் மொட்டுகள்.

இரவெலாம் சிந்தும்
    இளநீரின் முத்துகள்;
பரவலாய் முந்தும்
    பரல்மணி வித்துகள்.

# சிரிப்பு

புல்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லிக்—காலைப்
பூம்பனி வைரமாய்
மின்னியது!

நெல்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லி—வேர்வை
நித்திலம் பொற்கதிர்
மன்னியது!

அல்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லி—வானம்
ஆயிரம் முத்தாரம்
வீசியது!

வில்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லி—மேகம்
விண்ணுக்கு வர்ணங்கள்
பூசியது!

கல்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லி—ஜீவ
காவியம் சிற்பமாய்த்
துள்ளியது!

சொல்லில் சிரிக்கிறேன்
என்றுசொல்லிக்—கவிச்
சோதியோ அண்டம்வான்
அள்ளியது!



# விளக்கீடு

பூவகலில் வண்ணமணிப்
பூச்சிவிளக் கேற்றுது;—கண்
பாவைஅதைக் காணஉடன்
பார்வைவிளக் கேற்றுது!

தோரணமாய் வானவில்லும்
தொடரவிளக் கேற்றுது;—அதன்
காரணமாய் மங்கைகண்ணும்
கனவைவிளக் கேற்றுது!

வனமயிலும் தோகையிலே
வரிசைவிளக் கேற்றுது;—அதை
இனமடவார் கண்ணுஏறுந்தி
இன்பவிளக் கேற்றுது!

ஓடையில்நீர்க் குமிழியும்தான்
ஊடிவிளக் கேற்றுது;—அதைச்
சாடையில்கண் பார்க்கவும்தான்
சலனவிளக் கேற்றுது!

# கைத்திறன்

அந்தர வானவில் சிந்துரச் சேற்றினை
அள்ளி இறைத்தவர்யார்?—பிறைச்
சந்திரக் கிண்ணிச் சரவிளக் கேற்றிச்
சற்றே மறைத்தவர்யார்?

வண்ணத்துப் பூச்சி வரிகளில் கோல
வகையையும் செய்தவர்யார்?—எழில்
எண்ணற்ற பூக்களும் இந்திர வர்ணமாய்
இங்கிதம் பெய்தவர்யார்?

பன்னிற நாடாவின் பட்டென வானவில்
பாவும் வரிந்தவர்யார்?—அங்குப்
பொன்னிற வண்ணப் பொரிப்பொரி யாய்மத்தாப்
பூவும் சொரிந்தவர்யார்?

மாமயில் தோகை மணிவிசிர் ஆட்டத்தில்
மாயம் இழைத்தவர்யார்?—அவை
தாம்ஒயில் ஆகும் நடத்தில்பொற் காசும்
தழைய விளைத்தவர்யார்?

ஓடை களில்நீர் உல்லாசக் குமிழி
உருளவும் விட்டவர்யார்?—சிறு
காடை குருவிக் கவின்சிற குக்குள்
கவிதைமூச் சிட்டவர்யார்?

சொற்களின் கூளத்தில் சுந்தர காவியம்
சொக்கப் படைப்பவர்யார்?—பசும்
புற்களின் மேல்பனிப் பொன்னொளி மந்திரப்
பூட்டும் உடைப்பவர்யார்?

மணிமணிச் செம்புள் மாதுளைக் கெம்பும்
மடங்கென வைத்தவர்யார்?—அவை
அணிஅணி யாயும் அடுக்கடுக் காயும்
அழகுறத் தைத்தவர் யார்?

கன்னியர் நுங்கிளம் கன்னங்கள் தோறும்
கவிதை குழைத்தவனே—பின்னர்
மன்னிய மாயமாய் மற்றென்ன ஐயம்?
மகிழ்ந்திவை விளைத்தவனே!

# அருட்கொடை

தூளாய் உருளும் பனிப்பரலே,
துலங்க உன்னுள் நெடும்பனையும்
வாளா இருத்திக் காட்டவல்ல
வனப்பை நீயும் கற்றதெங்கே?

செம்மா துளையாம் கனிச்சிமிழே,
சேர உன்னுள் மணிப்பரலும்
அம்மா வியப்போ(டு) அடுக்கிவைக்கும்
அழகை நீயும் பெற்றதெங்கே?

மயிலின் தோகை மணிக்குளமே,
மயங்க உன்னுள் நிறம்பலவும்
பயிலும் வண்ணம் பாய்விரிக்கும்
பாங்கை நீயும் உற்றதெங்கே?

தங்க ஓடைத் தகதகப்பே,
தவழ உன்னுள் சலசலப்பும்
பொங்க ஓடிப் புரண்டுசெலும்
புதுமை நீயும் திரண்டதெங்கே?

பலவாம் சுளைகொள் பலாப்பழமே,
படலம் படலம் சுளைஅவையும்
கொலுவாய் உனக்குள் நிலவவரும்
குளுமை நீயும் செய்ததெங்கே?

ஏழைக் கவியே, உன்னிடம்ஓர்
எளிய சொல்லே உள்ளொளியால்
வாழக் கவிதை வரம்பெறல்போல்
வளமாய் இவையும் பெற்றன காண்!



# கவி அணங்கு

பாலில் முழுகும் பனிஇரவில்—நிலா
பரவி ஒழுகும் தனிவரவில்
வாலிப வல்லிமுன் வந்தனளே;—இள
வசந்தம்முன் செல்ல நடந்தனளே.

உதயம்நீ ராடும் ஒளிப்பொழுதில்—இந்த
உலகம்சீ ராடும் துளிவிழுதில்
இதயஎன் வல்லி எழுந்தனளே;—காதில்
ஏதேதோ சொல்லி வளைந்தனளே.

மஞ்சன மாலை மணிவெயிலில்—சுடர்
மரகதச் சோலை அணிவயலில்
அஞ்சன வல்லிநின்(று) ஆடினளே;—எனை
ஆங்குயிர் கெல்லியும் ஓடினளே.

காதலி அல்லள்; கவிதை அவள்!—வெறும்
கற்பனை அல்லள்; யுவதி அவள்!
ஆதலின் என்னுள் அயின்றனளே;—நவம்
ஆயிரம் மின்னப் பயின்றனளே!

## புன்னகை

புன்னகை யோஒரு புன்னகை;—என்னுள்
பொன்மண மாய்உறும் புன்னகை!
தன்னை இழந்திடும் புன்னகை;—வெறித்
தாபம் கிளர்ந்திடும் புன்னகை!

மின்னலின் வீச்சிடும் புன்னகை;—சுடர்
மின்சாரம் பாய்ச்சிடும் புன்னகை!
கன்னல் சுவைதரும் புன்னகை;—உயிர்க்
காதல் நவமுறும் புன்னகை!

கீற்று நிலவுபோல் புன்னகை;—உயிர்க்
கிளி மூக்(கு) அலகுபோல் புன்னகை!
ஆற்றல் மிகுந்திடும் புன்னகை;—ஊடல்
அகத்தும் புகுந்திடும் புன்னகை!

மாம்பழத் துண்டெனும் புன்னகை;—அதில்
மயக்கங்கள் உண்டெனும் புன்னகை!
வீம்பெழில் துள்ளிடும் புன்னகை;—பாளை
வெடிப்பெனக் கள்ளிடும் புன்னகை!

வண்ணத்துப் பூச்சியின் புன்னகை;—இள
வசந்தத்துக் காட்சியின் புன்னகை!
கண்ணொத்த காதலின் புன்னகை;—நெஞ்சம்
கனிந்தொத்த மோதலின் புன்னகை!

ஓடைகொள் சிற்றலைப் புன்னகை;—பின்னி
உறவுகள் பற்(று)அலைப் புன்னகை!
சாடைக்குத் தூதுசெல் புன்னகை!—ஏதோ
சாகசச் சேதிசொல் புன்னகை!

அரும்புகொள் மொட்டெனும் புன்னகை;—கள்ள
ஆசையின் வெட்டெனும் புன்னகை!
இரும்பும் உருக்கிடும் புன்னகை;—வன்கல்
இதயமும் நெக்கிடும் புன்னகை!

கனவுகள் பின்னிடும் புன்னகை;—பல
கற்பனை மன்னிடும் புன்னகை!
நினைவுகொள் வசியப் புன்னகை;—காதல்
நெஞ்சுக்(கு) அவசியப் புன்னகை!

மெல்ல நெளிவுறும் புன்னகை;—இதழ்
மீறத் தெளிவுறும் புன்னகை!
சொல்லவொண் ணாதர்மப் புன்னகை;—மனம்
சொக்கவும் காமர்தம் புன்னகை!

பாசத்தின் வார்ப்படப் புன்னகை;—ஏதோ
பரிவுக்கும் மேற்படும் புன்னகை!
நேசத்தின் நேசமாம் புன்னகை;—என்றும்
நிலைபெறப் பேசுமாம் புன்னகை!

நாகத்தும் ரத்தினப் புன்னகை;—அதில்
நவநவ முத்தெனும் புன்னகை!
ஆகத்தைச் சுண்டிடும் புன்னகை;—கோடி
ஆசையும் விண்டிடும் புன்னகை!



# வேண்டல்

மின்னலிலே நார்உரித்து
மீன்களிலே பூப்பறித்துப்
பின்னலிலே சூட்டசடைப்
பில்லைதா;—வெண்ணிலாப்
பில்லைமெல்லக் கிள்ளிஎனக்(கு)
இல்லை; தா!

கங்குலிலே சேலைநெய்து
கார்வில்லிலே மாலைகொய்து
திங்களிலே என்கழுத்தில்
சூட்டவா;—அன்றிஉன்
திருக்கரமே மாலைஎனப்
பூட்டவா!

புல்நீரிலே பரல்இழைத்துப்
புளரியிலே நிரல்வளைத்து
முன்நேரிலே அட்டிகையாய்க்
கொண்டுவா;—இல்லை; உன்
மொய்த்தவிழிப் பார்வைஅட்டி
உண்டு; வா!



# நினைவு நிழலில்

சந்தனப் பொய்கையிலே—தென்றல்
    சரசங்கள் நெய்கையிலே
வந்தநற் காதலிலே—உடன்
    வாலிப மோதலிலே
அந்தநன் னாட்களையே—எண்ணி
    ஆயிரம் பாக்களையே
சிந்தனைப் பண்இழைப்பேன்;—சிரஞ்
    சீவியாய் விண்வளைப்பேன்!

தேன்மழைச் சாரலிலே—பன்னீர்த்
    தென்றலின் தூறலிலே
தான்மலர் ஆசையிலே—சொர்க்கத்
    தவிப்புகள் பேசையிலே
நான்மகிழ் நாட்களையே—எண்ணி
    நவநவப் பாக்களையே
வான்மணிக் கீதைசெய்வேன்;—புது
    வரலாற்றுப் பாதைகொய்வேன்!

செண்பக ஓடையிலே—துள்ளும்
    செந்தமிழ் மேடையிலே
கண்புகும் வேட்கையிலே—விழிக்
    காந்தங்கள் தாக்கையிலே
பண்புகொள் நாட்களையே—எண்ணிப்
    பன்னூறு பாக்களையே
விண்புகழ் பூத்தொலிப்பேன்;—காதல்
    வெற்றிக்கே வாழ்த்தொலிப்பேன்!

# போதாமல்

ஏற்றிய தீபத்தில் எண்ணெய்போ தாதே
இதயத்தில் ஏற்றிவிட்டாள்;—அவ்
இதயம்கொள் தீபமும் எரியப்போ தாதே
உதயத்தில் மாற்றி விட்டாள்!

ஆற்றிய தொண்டினுக்(கு) அன்பு போ தாதென்றே
அன்னையைக் காட்டிவிட்டாள்;—அவ்
அன்னைமெய் அன்பும் அடங்காமற் காதற்கே
கன்னியைக் கூட்டிவிட்டாள்!

காட்டிய புன்னகைக் காட்சியும் போதாதே
கண்மலர் பூத்துவிட்டாள்;—அக்
கண்மலர்க் காட்சியும் காணாதென் றேஎங்கும்
விண்மலர் கோத்துவிட்டாள்!

மீட்டிய ராகமும் மேவாதென் றேகடல்
மேளமும் கொட்டிவிட்டாள்;—அம்
மெல்லிசை மேளமும் மீளாதென் றேஉயிர்
நாளமும் தட்டிவிட்டாள்!



# குழந்தைப்பூ

பிச்சிப்பூக் காதலிலே
பிறைப்பூவாய்த் தோன்றிமுன்னம்
உச்சிப்பூ முகர்ந்துவிட
உயர்கின்ற நிலவுப்பூ!

உள்ளப்பூ வேட்கையிலே
உறவுப்பூக் கட்டவிழ்ந்து
கொள்ளைப்பூ வாய்க்குலுங்கிக்
குறும்புதிர்க்கும் மழலைப்பூ!

பருவப்பூ வாசலிலே
பாசப்பூ மணம்பரப்பக்
கரு,அப்பூ வாகிஎழில்
கலைமணக்கும் அமுதப்பூ!

இரவுப்பூச் சேர்க்கையிலே
இளமைப்பூச் செலவழிய
வரவுப்பூ வாய்எனது
வழிநடத்தும் குழந்தைப்பூ!

# மழலை வாழ்த்து

குறுகுறு துள்ளல்கள்நீர்;—மழலைக்
கொடைதரும் வள்ளல்கள்நீர்!
சுறுசுறுப்(பு) உள்ளங்கள்நீர்;—ஒளிப்பூஞ்
சுடர்மழை வெள்ளங்கள்நீர்!

ஓடைக் குமிழிகள்நீர்;—நுரைக்கும்
உயிர்ப்புச் சிமிழிகள்நீர்!
பாடலின் சந்தங்கள்நீர்;—பிறவிப்
பரம்பரைச் சொந்தங்கள்நீர்!

நாட்டியச் சோலைகள்நீர்;—விடியும்
நவயுகச் சாலைகள்நீர்!
தீட்டிய கோலங்கள்நீர்;—உதவும்
தேவதைப் பாலங்கள்நீர்!

ஆலய தீபங்கள்நீர்;—கமழும்
அஞ்சலி தூபங்கள்நீர்!
மாலை வரிசைகள்நீர்;—இறைவன்
மகிழும் பரிசுகள்நீர்!

சங்கீத ராகங்கள் நீர்;—புதிய
சமுதாய மேகங்கள் நீர்!
இங்கித நெஞ்சங்கள் நீர்;—சுவர்க்க
இதயத்தின் மஞ்சங்கள் நீர்!

சிந்துர ஜாலங்கள் நீர்;—வரையாச்
சித்திர மூலங்கள் நீர்!
இந்திரக் கிண்ணிகள் நீர்;—கவர்ந்(து) உள்
இழுத்திடும் கண்ணிகள் நீர்.

வானவில் வண்ணங்கள் நீர்;—பதிந்த
வைரத்தோள் எண்ணங்கள் நீர்!
தேன் அவிர் முல்லைகள் நீர்;—குலுங்கும்
தெய்விகக் கொல்லைகள் நீர்!

தங்கப்பூ பாளங்கள் நீர்;—முதிர்ந்த
தந்தத்து நாளங்கள் நீர்!
பொங்கற்பூ மேளங்கள் நீர்;—உயிராய்ப்
பூரிக்க வாழுங்கள் நீர்!

சந்தனச் சிற்பங்கள் நீர்;—அரும்புச்
சரமணித் தெப்பங்கள் நீர்!
வந்தனம் பிள்ளைகளே,—உமக்(கு)என்
வாழ்த்துகள் கொள்ளைகளே!



## புதுப் பாப்பா!

பாப்பா ஒண்ணு எங்க வீட்டில்
முளைச்சி ருக்குது;—அது,
படுத்துக்கிட்டே என்னைப்பார்த்துப்
பார்த்துச் சிரிக்குது.

கேட்பார் இல்லை; தரையில் எம்பிக்
காலை உதைக்குது;—அதன்
கிட்டப் போனால் பட்டுக் காலால்
எட்டி மிதிக்குது.

அம்மா கிட்டப் போகக் கையை
ஆட்டி அழைக்குது;—அவள்
அந்தப் பக்கம் மறைஞ்சு போனால்
வாயைப் பிளக்குது.

சும்மா சும்மா பானுக் காகச்
சுத்தி அழுவுது;—என்ன
சூழ்ச்சி கள்தான் பண்ணி னாலும்
கத்தித் தழுவுது.

பல்லு கூட முளைக்க லே; தின்
பண்டம் கேட்குது;—அப்பா
பால்மு கத்தைக் கிள்ளிக் கிள்ளிப்
பதமே பார்க்குது.

தொல்லை நித்தம் கொடாமல் தூங்க
மாட்டேன் என்குது;—போட்ட
தொட்டிலிலும் எட்டிப் பார்த்தே
தலைகீழ் தொங்குது.

தத்துப் பித்துன்னு சுத்திச் சுத்தித்
தானே உளறுது;—ஒரு
தண்ணி மழையைக் கண்டால் போதும்;
மண்ணைக் கிளறுது.

அத்தை அக்காள்னு குதிகு திச்சே
ஆட்டம் போடுது;—பார்த்த
அத்த னையும் வேணு மின்னே
நோட்டம் போடுது.

6

அக்கா நோட்டும் தூக்கி வைச்சே
அழகு பார்க்குது;—படிச்ச
அடையா ளமாய்த் தாள்க ளையும்
கிழிச்சுப் பார்க்குது.

சொக்காயையும் டெக்னிக் கலரு
ஷோவாய்ப் பண்ணுது;—அடே,
சுந்தர் இண்ணா அந்தர் ஒண்ணு
போட எண்ணுது.

பாப்பா புதுப் பாப்பா அதோ
படுத்தி ருக்குது;—ஆசு
பத்தி ரிக்குப் போய்அம் மாதான்
வாங்கி வந்தது.

கேட்பார் இல்லை; பாப்பா பண்ணும்
கேலிக் கூத்திது;—இன்னும்
கேட்கக் கேட்கச் சொல்லு வேன்நான்;
நேரம் போதாது.



# வகிடு

மேகத்தில் வகிடு
    மின்னல் இழைத்தது;—தென்னை
மீதினில் வகிடு
    தென்றல் வளைத்தது.

கடல்நீரில் வகிடு
    கப்பல் கிழித்தது;—இரு
கன்னத்தின் வகிடோ
    உப்பு துளிர்த்தது.

வயல்களின் வகிடு
    வரப்பு கிடந்தது;—நில
வறட்சியின் வகிடு
    வெடிப்பு தொடர்ந்தது.

கொல்லைமேல் வகிடு
    குறும்பனி தைத்தது;—புற்றுக்
கூட்டமேல் வகிடு
    எறும்(பு)அணி மொய்த்தது.

பட்டண வகிடு
    பாதை இட்டது;—அந்தப்
பாதைமேல் வகிடு
    வானம் தொட்டது.

ஆறுமேல் வகிடு
    அணைகள் எடுத்தது;—மங்கை
ஆசைமேல் வகிடு
    குடும்பம் தடுத்தது.

குடும்பத்தின் வகிடு
    கூட்டு பிரிவது;—கட்சிக்
கூட்டணி வகிடு
    கொள்கை முறிவது.

ஏழைமேல் வகிடு
    எலும்பு தெரிவது;—பச்சை
இலைகள்மேல் வகிடு
    நரம்பு சொரிவது.

நெற்றிக்கு வகிடு
    நேர்கோ(டு) எடுத்தது;—இமை
நேர்விழி வகிடு
    பார்வை தொடுத்தது.

முகத்துக்கு வகிடு
    மூக்கெடுப் புண்டது;—புற
முதுகுக்கு வகிடு
    நேர்நடுத் தண்டது.

கவிதையின் வகிடு
    காய்சீர் பிரித்தது;—சுர
கானத்தின் வகிடு
    தாளம் பொறித்தது.

தேவைக்கு வகிடு
    திட்டம் வகுப்பது;—நீதித்
தெளிவுக்கு வகிடு
    சட்டம் தொகுப்பது.

செல்வமேல் வகிடு
    சீர்ப்பங் கிடுவது;—கொண்ட
செழிப்புமேல் வகிடு
    ஊர்ப்பங் கிடுவது.

வாழ்க்கையின் வகிடு
    பிறப்பிறப் பானது;—ஆம்
வரலாற்றின் வகிடோ
    திருப்பங்கள்! ஏன் அது?



# ஒற்றையடிப் பாதை

ஒற்றையடிப் பாதை;—அது,
ஊர்க்குநடை பாதை.
ஒற்றையடிப் பாதை...

சுற்றிஓடும் வாழ்க்கை—ஒன்றும்
தொட்டுச்செல்லா தென்றே
கற்றுத்தரும் பாதை;—திசை
காணஒண்ணாப் பாதை.
ஒற்றையடிப் பாதை...

கைகளுக்கே எட்டா—மனக்
கனவுகளும் விட்டுப்
பொய்களுக்கே அப்பால்—ஓடிப்
போம்அனைய பாதை
ஒற்றையடிப் பாதை...

விலைமகளிர் காட்டும்—வஞ்ச
வித்தைஎலாம் போலத்
தலைமறைவில் வானம்—தொட்டுத்
தழுவிநிற்கும் பாதை.
ஒற்றையடிப் பாதை...

நீண்டமலை நாகம்—ஒரு
நெடுங்கிடையாய் மண்ணிற்
பூண்டசைவும் இன்றித்—துயில்
போவதொத்த பாதை.
ஒற்றையடிப் பாதை...

விட்டகுறி அம்பின்—ஒரே
விசைத்தடத்தைப் போல
எட்டும்வரை கண்கள்—தொட
எதிர்இருக்கும் பாதை.
ஒற்றையடிப் பாதை...

மடல்விரிந்த ஒலைத்—தென்னை
மட்டைத்தண்டு போலப்
படல்விரிந்த காட்டில்—தனிப்
படவருந்தும் பாதை.
ஒற்றையடிப் பாதை...

சோகநெடும் பாட்டில்—இசைச்
சுருதிஒன்று போல
வேகநெடு மேட்டில்—உயிர்
வேட்கைவிம்மும் பாதை.
ஒற்றையடிப் பாதை...

ஏழைவிடும் மூச்சில்—பெரும்
ஏக்கம்உண்டு போலச்
சூழவெறும் காட்டில்—மனச்
சுதிஒலிக்கும் பாதை.
ஒற்றையடிப் பாதை...

துயர்ச்சுமைகள் தாங்கி—நடை
    தொய்பவனைப் போல
முயற்சிஇன்றி ஏங்கிப்—பின்னும்
    மூச்சிழந்த பாதை.
                ஒற்றையடிப் பாதை...

பற்றனைத்தும் விட்டோன்—எங்கோ
    பயணம்போதல் போலப்
பெற்றநடை நீளும்—கொள்கைப்
    பிடிபடாத பாதை.
                ஒற்றையடிப் பாதை...

வானவிற்பல் லக்கு—கொண்ட
    வரிசைபோதல் போலத்
தானசைந்தே பெண்கள்—குடம்
    தாங்கிச்செல்லும் பாதை.
                ஒற்றையடிப் பாதை...

கோதைகுழல் மீது—மின்னும்
    கூர்வகிடு போலக்
காதைநெடும் காதை—எனக்
    காவியம்செய் பாதை.
                ஒற்றையடிப் பாதை...

வரவுசெல வாக—யுகம்
    வளர்கதையே நீண்டு
நிரவும்வர லாறாம்—என
    நிச்சயிக்கும் பாதை.
                ஒற்றையடிப் பாதை...

கண்ணிழந்தோர் கையை—மெல்லக்
காதலொடும் பற்றி
நண்ணும்வழி செல்லும்—உண்மை
நண்பரொத்த பாதை.
ஒற்றையடிப் பாதை...

நம்பிக்கையில் ஊக்கம்—ஒரே
நாட்டமுற்றோர் போல
அன்புக்கையை நீட்டி—நமை
அரவணைக்கும் பாதை.
ஒற்றையடிப் பாதை...

புல்லின்முடி எல்லாம்—வைரப்
பொட்டுருண்டே நழுவும்;
வல்லியர்மென் பாதம்—ஆம்; அவ்
வான்பனிநீர் கழுவும்.
ஒற்றையடிப் பாதை...

ஒற்றையடிப் பாதை;—இது,
ஊருக்கொரே பாதை.
நெற்றிநெடும் காட்டில்—இது,
நீண்டநீண்ட பாதை.
ஒற்றையடிப் பாதை...



# சுமைகள்

மூளைச் சுமைகள் மூடம் ஏறின;
முதுமைச் சுமைகள் பாடம் கூறின.
தோளின் சுமைகள் பொறுப்பு கூட்டின;
தொல்லைச் சுமைகள் வெறுப்பு நீட்டின.

வயிற்றுச் சுமைகள் வாழ்வை ஒடுக்கின
வாழ்வுச் சுமைகள் தாழ்வை அடுக்கின.
முயற்சிச் சுமைகள் முன்னே அழைத்தன;
முடியாச் சுமைகள் பின்னே இழுத்தன.

இதயச் சுமைகள் எண்ணம் இடித்தன;
இமையின் சுமைகள் கண்ணீர் வடித்தன.
விதியின் சுமைகள் விம்மி வெடித்தன;
விளைவோ? சுமைகள் கும்மி அடித்தன!



# கரைமேல்

ஆசைக் கரைமேல் அறியாமை மோதிடும்,
ஆர்வக் கரைமேல் வெறிஆமை மோதிடும்.
பாஷைக் கரைமேல் பதங்களே மோதிடும்;
பரமன் கரைமேல் மதங்களே மோதிடும்.

இதயக் கரைமேல் ஏக்கங்கள் மோதிடும்;
எழுச்சிக் கரைமேல் தூக்கங்கள் மோதிடும்.
உதயக் கரைமேல் உணர்வுகள் மோதிடும்;
உள்உயிர்க் கரைமேல் கனவுகள் மோதிடும்.

வரவுக் கரைமேல் செலவுகள் மோதிடும்;
வானக் கரைமேல் நிலவுகள் மோதிடும்.
இரவுக் கரைமேல் இளமைகள் மோதிடும்;
இளமைக் கரைமேல் பழமைகள் மோதிடும்.

விதியின் கரைமேல் விருப்பங்கள் மோதிடும்;
விருப்பக் கரைமேல் திருப்பங்கள் மோதிடும்
மதியின் கரைமேல் மயக்கங்கள் மோதிடும்;
மயக்கக் கரைமேல் இயக்கங்கள் மோதிடும்.

காலக் கரைமேல் கடமைகள் மோதிடும்;
கடமைக் கரைமேல் மடமைகள் மோதிடும்.
மூலக் கரைமேல் முடிவுகள் மோதிடும்;
முடிவுக் கரைமேல் விடிவுகள் மோதிடும்.

சாதனைக் கரைமேல் சோதனை மோதிடும்;
சோதனைக் கரைமேல் வேதனை மோதிடும்.
போதநற் கரைமேல் போலிகள் மோதிடும்;
போலியின் கரைமேல் கேலிகள் மோதிடும்.

ஆண்டுக் கரைமேல் ஆயுள் மோதிடும்;
ஆயுள் கரைமேல் நோயும் மோதிடும்.
பூண்ட செயல்மேல் பொறாமை மோதிடும்;
போகட்டும்; எங்குமே நிராசை மோதிடும்.

சரித்திரக் கதைமேல் சாவுகள் மோதிடும்;
சத்தியக் கரைமேல் வாழ்வுகள் மோதிடும்.
அரித்திடும் கொள்கைமேல் அரசியல் மோதிடும்;
அப்புறம்?... அப்புறம்?... வெறிசெயல் மோதிடும்!



# உயிர்ப்பு

மூலத்தின் ஓரத்தில்
    முளைவிட்ட வித்தொன்று
காலத்தின் ஓரத்தில்
    கனல்முட்டப் பூக்கிறது.

உதயத்தின் ஓரத்தில்
    உயிர்த்திட்ட மூச்சொன்று
இதயத்தின் ஓரத்தில்
    எனைஎட்டிப் பார்க்கிறது.

தொடக்கத்தின் ஓரத்தில்
    துளிர்விட்ட வினைஒன்று
அடக்கத்தின் ஓரத்தில்
    அப்பாலும் விரிகிறது.

புழுக்கத்தின் ஓரத்தில்
    பொரிந்திட்ட குஞ்சொன்று
ஒழுக்கத்தின் ஓரத்தில்
    உறவுக்கே தவிக்கிறது.

நெஞ்சுக்குள் ஓரத்தில்
    நிழல்இட்ட கனவொன்று
பிஞ்சுக்குள் ஓரத்தில்
    பிரமிப்பாய் வளர்கிறது!



# அந்த நாள்

பருவம் என்ற மேடை முன்னே
  பலதி ரைகள் ஆடிடும்;
உருவம் என்ற நிழல்கள் அங்கே
  ஒவ்வொன் றாகக் கூடிடும்.

இரவும் ஒன்று பகலும் ஒன்றாய்
  எண்ணி நாள்கள் விடிந்திடும்;
வரவும் ஒன்று செலவும் ஒன்றாய்
  வாழ்வுக் கூத்து முடிந்திடும்.

காலம் என்ற மாய னாரின்
  கைத்தி றங்கள் என்னவோ?
கோல மன்றில் சாயம் இட்ட
  கொள்கை தானும் மின்னவோ?

ஓலம் நின்று நாத வெள்ளம்
  ஒடுங்க லும்தான் என்றைக்கோ?
மூலம் வென்று நாமும் மொத்தம்
  மூலம் ஆவ(து) அன்றைக்கோ?



# மனிதன்

அழுது கொண்டே உலகம் நோக்கி
வருகிறான்;—பின்
பழுது கண்டே கலகம் ஊக்கி
மறைகிறான்.

குறிஇ லாதே வெறிஅ ளந்து
குதிக்கிறான்;—பின்
வெறியின் மீதே நெறிஇ ழந்தும்
விதிர்க்கிறான்.

ஆசை மட்டும் அமைய வீம்பில்
அலைகிறான்;—பின்
கூசு மட்டும் குமையத் தேம்பிக்
குலைகிறான்.

மனித வாழ்வின் மருமம் என்ன
மருமமோ?—அதன்
புனிதம் யாவும் புலம்பிப் பின்னும்
பொருமுமோ?



# புதிர்

பலபல மயக்கம்
பலபல தயக்கம்
பார்இவை. தாமே
உலகம்;—அதிலும்
சிலசில இயக்கம்
சிலசில நயக்கும்
சேர்ந்திவை தாமே
கலகம்!

பலபல இயல்கள்
பலபல செயல்கள்
படைப்பவை தாமே
தருமம்;—அதிலும்
சிலசில மயல்கள்
சிலசில புயல்கள்
சிரிப்பவை தாமே
மருமம்!

பலபல நடிப்பு
பலபல நொடிப்புப்
பாத்திரம் தாமே
மனிதன்;—அதிலும்
சிலசில துடிப்பு
சிலசில பிடிப்புச்
சித்திரம் தாமே
புனிதன்!



# மனக் கணக்கு

செலவே என்று பேதைமனம்—தினங்கள்
சென்ற தெண்ணிப் பறக்கிறது;—அதுதான்
வரவே என்று வாதைமனம்—அநுப
-வங்கள் ஏற்க மறுக்கிறது.

இருளே எனக்கண்(டு) ஊமைமனம்—புதிய
எதிர்கா லத்தைப் பழிக்கிறது;—அதுதான்
அருளே எனக்கண்(டு) ஆமைமனம்—ஒளியை
அறியா மல்தான் விழிக்கிறது.

குறையே என்று மூடமனம்—நிறைவு
கொள்ளா விதமே அலைகிறது;—அதுதான்
இறையே நின்ற பீடமென—உணர
ஏலா மையால் மலைகிறது.

பகையே என்று தாழ்வுமனம்—மனித
பலத்தை, புவியை வெறுக்கிறது;—அதுதான்
வகையே வாழ்வும் யாவுமெனும்—ஒருநாள்
வாரா மையால் சிரிக்கிறது.



## பச்சோந்திப் பராபரங்கள்

கலையென்றும் கல்வியென்றும்
காசடிக்கும் வித்தைகளை
விலைஇன்று பேசத்தான்
வெளிச்சங்கள் பராபரமே.

நெறியென்றும் நீதியென்றும்
நியாயங்கள் சாகடிக்க
வெறிஇன்று முட்டத்தான்
வேடிக்கை பராபரமே.

அறம்என்றும் அன்பென்றும்
ஆயிரமாய் அளந்துவிட்டுப்
புறம்இன்று பேசத்தான்
பொய்வேடம் பராபரமே.

மதம்என்றும் மார்க்கமென்றும்
மக்களை மாற்றிவிட்டு
நிதம்இன்று சுரண்டத்தான்
நியமங்கள் பராபரமே.

வாழ்வென்றும் வளம்என்றும்
வாய்வீரம் பேசிவிட்டுத்
தாழ்வின்று வைக்கத்தான்
தன்னலங்கள் பராபரமே.

குடிஎன்றும் குலம்என்றும்
கொக்கரிக்கப் போதைஉச்சி
முடிசென்று சுருட்டத்தான்
முனைப்பின்று பராபரமே.

மனம்என்றும் சாட்சிஎன்றும்
மாய்மாலம் காட்டிவிட்டுத்
தினம்இன்று போலிகட்கே
திருவிழாக்கள் பராபரமே.



## போலிகள்

விளக்கினை ஏற்றிவிட்டுக்—காற்றை
    விசிறவும் வைப்பாரோ?—உடல்
அழுக்கினைப் போக்கிவிட்டுச்—சேற்றை
    அளையவும் துய்ப்பாரோ?

தேசியம் பேசுகிறார்;—ஆனால்
    திருடுகள் பண்ணுகிறார்!—புகழ்ந்(து)
ஆசியும் கூறுகிறார்;—ஆனால்
    அழிவையே எண்ணுகிறார்!

போலியும் தாம்இவர்கள்;—ஏன், நெப்
    போலியன் போல் நடிப்பார்?—காவல்
வேலியே தன்பயிரை—மேயும்
    வித்தையும் மேல்படிப்பார்!

என்ன மனிதர்இவர்?—ஆமாம்;
    ஏமாற்ற வல்லவர்தாம்!—ஓர்நாள்
அன்னவர் வேடமெலாம்—தீரும்;
    அதுவரை நல்லவர்தாம்!



## நம்மால்தான்

நன்றியினால் வால்ஆட்டும்
நாய்கூடப் பின்ஒருநாள்
அன்றிதனைச் செய்யாமல்
அலட்சியமாய் மறந்துவிடும்.

காரணம்அந் நன்றிமனம்
கடுகளவும் கொள்ளாத
நா,ரணமாம் மனிதரெனும்
நாம்தானே வளர்க்கின்றோம்!

கரைந்துகரைந்(து) இரந்துண்ணும்
காகமுமே பின்ஒருநாள்
மறந்துதம்முள் ஒற்றுமையை
மாறாகத் துறந்துவிடும்.

ஏன்என்றால் இனப்பற்றே
எள்ளளவும் இல்லாத
நான்என்ற அகந்தையராம்
நாம்தானே அழைக்கின்றோம்!

பிறர்உதிரம் உறிஞ்சிஉண்ணும்
பேய்முட்டை களும்ஒருநாள்
வர, அதிலே தம்இனமும்
வாழாமல் செத்துவிடும்.

ஏன்என்றால் அவற்றினுக்கே
இரை,நஞ்சாய்க் குருதிகொண்டு
தான்நின்ற நாம்தானே
தாராளம் வழங்கிவிட்டோம்!



# கேள்விகள்

சுதந்திரம் என்பதே
  சுயநலம் பேணவா?—இல்லை;
இதந்தரும் நன்மைகள்
  எல்லோரும் காணவா?

உரிமைகள் என்பதே
  ஒருசிலர்க் கெட்டவா?—இல்லை;
பெருமைஎல் லோர்க்குமாய்ப்
  பெரும்பயன் கிட்டவா?

கடமைகள் என்பதே
  கண்துடைப் பாக்கவா?—இல்லை;
உடைமைகள் வந்திங்கே
  உன்னதம் பூக்கவா?

செல்வங்கள் என்பதே
  சிற்சிலர் சொந்தமா?—இல்லை;
பல்வகை உழைப்பினர்
  பாட்டுக்குச் சொந்தமா?

தாயகம் என்பதே
    தனித்தனிக் கூட்டமா?—இல்லை;
தாயக ருத்தொன்றித்
    துலங்குநீ ரோட்டமா?

ஒருமைப்பா டென்பதே
    உளுத்ததோர் கேள்வியா?—இல்லை,
அருமைப்பண் பாட்டுக்கே
    அருந்தவ வேள்வியா?

பாரதம் என்பதே
    பழையதோர் வாதமா?—இல்லை;
பூரத மாய்இன்று
    புலர்ந்தசங் கீதமா?

மனிதர்நாம் என்பதே
    மறந்து போகவா?—இல்லை;
இனிதுயிர் நல்கியும்
    இந்தியர் ஆகவா?

வினாக்களைக் கேட்டும்நாம்
    வெறுமைதான் கொள்ளவா?—இல்லை;
கனாக்களில் மூழ்கிடாக்
    கடமைமேல் துள்ளவா?





சந்தக் கவிமாமணி

**தமிழழகன்**

(வே. சண்முகம்)

புதுப்புதுச் சந்தங்களிலும் யாப்பு வடிவங்களிலும் ஏராளமாகப் பாடல்கள் புனைந்துள்ள இவர், தூத்துக்குடியில் 21—4—1930-இல் திரு. வேலு செட்டியார், திருமதி. வள்ளி அம்மை ஆகியோரின் நான்காவது மகனாகப் பிறந்தவர்.

'பாரதி பரம்பரை', 'பாரதிதாசன் பரம்பரை' போன்ற பாராட்டுகளைப் பத்திரிகைகளாலும் 'சந்தக் கவிமணி', 'கவிமாமணி', 'தமிழ் இலக்கியக் காவலர்' போன்ற பட்டங்களை இலக்கிய நிறுவனங்களாலும் பெற்றதோடு பாரத அரசின் ஒலிபரப்புத்துறை நடத்திய பாடல் போட்டியில் இந்தியாவிலேயே முதற் பரிசும், தமிழக அரசின் பாவேந்தர் விருதும் வி. ஜி. பி. நிறுவனத்தின் பாராட்டும் பெற்றுள்ளார்.

'தமிழழகன் கவிதைகள்', 'மழலை அமுதம்', 'பூமத்தாப்பு' இன்னும் சில பிரபந்தங்கள் இவருடைய நூல்கள். வானொலியில் பணி ஆற்றியுள்ள இவரின் பாடல்கள் திரைப் படங்களிலும் வந்துள்ளதோடு ஆங்கிலத்திலும் இந்தியிலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. சிறுவர் இலக்கியத்திலும் சிறப்பான இடம் இவருக்கு உண்டு.

புலவர் மா. கி. இரமணன், எம்.ஏ., எம்.எட்.

அழகுதான்